# கல்கி



KALKI ஜனவரி 14, 1951 4 அண


ஹிமாலயா
புக்கே
டாய்லட், டால்கம் பௌடர்களின்
இனிமையான பரிமளத்தை
அனுபவியுங்கள்
Himalaya Bouquet
Himalaya Bouquet
நறுமணமுள்ள நேர்த்தியான ஹிமாலயா புக்கே பௌடர்கள் உங்களை மலர்ச்சியுடன் இருக்கச்செய்கின்றன. அவை உங்கள் சருமத்திற்கு குளுமையும் ஆறுதலும் தருகின்றன. அவைகளின் மென்மையான நீடித்து நிற்கும் பரிமளம் உங்கள் அழகு பராமரிப்பை பூர்த்தி செய்கிறது.
நேர்த்தியான இரு
இராஸ்மிக் தயாரிப்புகள்
HBP. 1-172-55 TM
இராஸ்மிக் லிம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை



## "என் கிராமத்தில் விரோதி மலேரியாவை நாங்கள் வீழ்த்தி விட்டோம். இதற்கு உதவியது பாலுட்ரின்……

மலேரியாவைப்பற்றி எங்களுக்கு இனி பயமேயில்லை. எங்கள் கிராமத்திலே அது மிகவும் பயங்கரமான கஷ்டங்களைக் கொடுத்து வந்தது. ஆனால் ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விதம் 3 நாட்கள் உட்கொண்டால் மலேரியாவைக் குணப்படுத்தும் என்பது இப்போது எங்களுக்குத் தெரிந்துவிட்டது. மலேரியா வராமல் தடுக்க வாரம் ஒரு மாத்திரை உட்கொள்ளவேண்டும் என்பதையும் நாங்கள் அறிவோம்".

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை விதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்விட்டு தேகிமே விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. பெரியவர்கள், வயோதிகர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.

# 'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.



குணத்தின் (ICI) சின்னம்

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,

கல்கத்தா பம்பாய் சென்னை கொச்சி புதுடில்லி கான்பூர்.

ICY-3 TM

கட்டிட வேலைகளுக்கெல்லாம்
திட்டமாக குறிக்க வேண்டியது..

## சூலம் மார்க்

IC

சங்கர் பிராண்ட்
போர்ட்லண்ட் சிமெண்ட்

## திடத்திலும்
## தரத்திலும்
## தேர்ந்தது

தென்னிந்தியா முழுவதும் இந்தியா
சிமெண்ட்ஸ் ஸ்டாக்கிஸ்டுகளுள்ளனர்

---

# இந்தியா சிமெண்ட்ஸ் லிட்.

தொழிற்சாலை: தாழையூத்து, திருநெல்வேலி ஜில்லா.
ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்: 11/12, செகெண்ட் லைன் பீச், மதராஸ் – 1

# வயிற்றிலுள்ள புளிப்புக்கு பலியா?

## இவ்விதம் தீர்த்துக் கொள்ளவும்...



நீ வயிற்றிலுள்ள புளிப்புக்கு பலியாக இருப்பதால், பிரா ஆகாரம் உனக்கு விஷம் என்று நாத்திரியம் கொண்டு கவலைப்படுகிறாயா? அப்படியானால், நிச்சயமும், நம்பிக்கையுள்ளதுவும், கட்டாயம் பயன் தரும் வழி இதோ இருக்கிறது. சாப்பிட்டவுடன் ஒரு தேக்கரண்டி அளவு பிஸ்மாக் (4 or 5 மாத்திரைகள்) கை கொஞ்சம் ஜலத்துடன் எடுத்துக்கொள்ளவும்

பிஸ்மாக்கிலுள்ள மருந்து உடனே வேலை செய்யத் தொடங்கி வயிற்றிலுள்ள அதிக புளிப்பை சமனப்படுத்தி, மிருதுவான குடல் ஓரங்களை சாந்தப்படுத்தி, சாப்பாடு கெடாமல் பாதுகாக்கிறது. சில நாட்கள் ஒவ்வொரு சாப்பாட்டிற்கு பிறகும் பிஸ்மாக் மருந்து அளவை திரும்பத் திரும்ப சாப்பிட்டால், அதன் குணப்படுத்தும் வேலையை தொடர்ந்து செய்யும்.



**"பிஸ்மாக்" எவ்வாறு வலியிலிருந்து குணமாக்கிறது.**

வயிற்றுக் கோளாறுகளுக்கெல்லாம் முக்கிய காரணமான, வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்பை முறித்துப் பயனற்றதாகச் செய்கிறது. "பிஸ்மாக்" புளிப்பை முறிக்கும் பொருள் அதிசீக்கிரமாக வலியைக் குறைத்தவுடன் மற்றப் பொருள்கள் வேலையைத் துவக்குகின்றன. ஒன்று புளிப்பு வயிற்றினுள் மேலும் சேருவதைத் தடுப்பது. மற்றொன்று வயிற்றின் உள்தோலின் எரிச்சலைக் குறைத்துக் குணப்படுத்துவது.

**‘பிஸ்மாக்’**

**க்ஷணமே அஜீர்ணத்தைப் போக்குகிறது**




மாத்திரைகளாகவும் பவுடராகவும் கிடைக்கும்

இந்தியாவில் தயாரிப்பவர்கள் :

**ஜியாப்ரேமானர்ஸ் & கோ. லிட்., பம்பாய்-1**

**பிராஞ்சுகள் : கல்கத்தா - மதராஸ் - டில்லி**

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

●

எவ்வளவு காட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான **வீனஸ் சார்ம்** வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிரங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக்கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

●

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

●

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

## அதி அற்புத ரகங்கள்!

புகழ் பெற்ற ஸ்விஸ் பாக்டரிகளில் தயாரானது ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாத முள்ளவை



6 ஜுவல் க்ரோம் 30/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 35/- உயர் ரகம் 38/-
15 ,, க்ரோம் 44/- ரோல்டுகோல்டு 48/-



5 ஜுவல் க்ரோம் 28/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 33/- உயர் ரகம் 35/-
15 ,, க்ரோம் 42/- ரோல்டுகோல்டு 45/-



முழுவதும் ஜுவல் 19/- உயர் ரகம் 21/-
ரேடியத்துடன் 21/- செகண்ட் 23/-
ஸ்பெஷல் உயர்ந்த ரக மெஷின் 27/-



6 ஜுவல் க்ரோம் 26/- ரோல்டு கோல்டு 32/-
7 ,, க்ரோம் 32/- ரோல்டு கோல்டு 36/-
15 ,, க்ரோம் 48/- ரோல்டு கோல்டு 58/-



6 ஜுவல் க்ரோம் 22/- உயர் ரகம் 25/-
5 ,, ரோல்டு கோல்டு 30/- உயர் ரகம் 33/-
15 ,, க்ரோம் 45/- ரோல்டு கோல்டு 55/-

டைம் பீஸ் 20/- உயர் ரகம் 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர் ரகம் 15/-

தபால் செலவு பிரத்தியேகம். இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு தபால் செலவு இலவசம்

✱

**PIONEER WATCH CO.**

POST BOX No. 11428 CALCUTTA

## 13-1-51 முதல் வெற்றிகரமான இரண்டாவது வாரம் !

# சென்னை சாகர் டாக்கீஸில்

இவ்வருஷத்திய மகத்தான சிருஷ்டியெனப் பலராலும் புகழப்படும்

# "ராஜ்-ராணி"

கனம் ரவி சங்கர் சுக்லா அவர்களால்

மிகவும் உயர்ந்த படமென போற்றப்பட்டு பாராட்டப் பட்டது.



ஹிமாலய மக்களின் உன்னத வாழ்க்கைச் சித்திரத்தை நன்கு வெளிப்படுத்துவது

*

நடிகர்கள் :

**மீனா - ரெஹ்மான்**

**ரோஷன் - சசிகலா**

மற்றும் பலர்

*

பாடல்கள் : மாதோக்

சங்கீதம் : ஹன்ஸ்ராஜ் பீல்

*

கீழ்க்கண்ட இடங்களிலும் ஓடிக்கொண்டிருக்கிறது

**வெரைட்டி ஹால்-கோயமுத்தூர்**

**ஜயா - ராஜமஹேந்திரபுரம்**

**கிருஷ்ணா - தஞ்சாவூர்**

**G. F. D. வெளியீடு**

விவரங்களுக்கு

## ஜெனரல் பிலிம் டிஸ்ட்ரிப்யூட்டிங் கம்பெனி

காந்தி நகர் - - - பெங்களூர் ஸிடி

பிராஞ்சுகள்: விஜயவாடா, பெல்லாரி, திருச்சி, எர்ணாகுளம், செகந்திராபாத், மதராஸ்

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10
இதழ் 24

1951 ஜனவரி 14

விக்ருதி ௵
தை 1





## புது வருஷ மோஸ்தர்கள்!



கல்கி

# வெளியேற்று விழா வேண்டாம்!

காஞ்சீபுரத்தில் இம்மாதம் 7உ தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டி கூடியது. மக்களைப் பாதிக்கும் இரண்டு முக்கிய விஷயங்களைப் பற்றி முக்கிய தீர்மானங்களை நிறைவேற்றியது. ஒன்று, உணவுத் கட்டுப்பாடு; இரண்டாவது நூல் பற்றாக் குறை.

நீண்ட நாள் கிளர்ச்சிக்குப் பிறகு சென்னை சர்க்கார் ஒரு நல்ல தீர்மானம் செய்தார்கள். அதாவது கிராம ரேஷனையும் பற்றாக் குறை ஜில்லாக்களின் தானியக் கொள்முதலையும் எடுத்து விடுவது என்ற தீர்மானம். இந்தக் காரியங்கள் எவ்வளவு அவசியமானவை என்பதை "கட்டுப்பாட்டை வெறுப்பதேன் ?" என்ற தலையங்கத்தில் விளக்கியிருந்தோம்.

கிராம ரேஷனையும் கொள் முதலையும் எடுத்த உடனே, விலைவாசிகள் ஏறுவது இயற்கை. இதைக் காரணமாகக் காட்டி அதிகார வர்க்க வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தின் மேல் ஏறிக் கொள்ளப் பார்க்கும். அதற்கு இடந்தரக் கூடாது. பீதியடையவும் கூடாது.

விலைவாசிகள் ஆரம்பத்தில் விரைவாக ஏறிச் சில காலத்துக்கெல்லாம் சரி மட்டத்துக்கு வந்து விடும். அதுவரையில் நிலைமையைச் சமாளிப்பது சர்க்கார் கடமை. பொது மக்களும் ஒத்துழைக்க வேண்டும்.

நியாய விலைத் தானியக் கடைகளைச் சர்க்கார் தாராளமாக ஏற்படுத்த வேண்டும். விவசாயிகள் அதிக லாபம் சம்பாதிக்கப் பேராசைப்படாமல் நியாய விலைக்குத் தானியங்களை விற்கவேண்டும்.

இவ்வளவுடன், பட்டணங்களில் வசிப்போருக்கு ரேஷன் தானியம் கொடுத்துச் சமாளிப்பதற்கு வேண்டிய அளவு இந்திய சர்க்கார் தானியங்களை இறக்குமதி செய்து அனுப்ப வேண்டும்.

இந்த விஷயங்களைப் பற்றித் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டி நல்ல முறையில் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. தீர்மானத்தை அனுசரித்துத் தீவிர நடவடிக்கை எடுத்துப் பிரசாரமும் செய்வது அவசியம்.

உணவுப் பஞ்சம் ஏற்படும் போல் தோன்றும் இடங்களில் நியாய விலைக் கடைகள் ஏற்படுத்தும்படி சர்க்காரை வற்புறுத்த வேண்டும்.

கிராமங்களில் விளையும் தானியங்கள் கிராமங்களிலேயே நியாய விலைக்கு விற்கும்படி தீவிர பிரசாரம் செய்ய வேண்டும்.

பஞ்சப் பிரதேசங்களில் பஞ்ச நிவாரண வேலை தொடங்கும்படி சர்க்காரைத் தூண்டி வற்புறுத்த வேண்டும்.

இத்தனை நாளும் இந்த மாகாணத்திலுள்ள காங்கிரஸ்வாதிகளில் பெரும்பாலோர் காங்கிரஸ் ஸ்தாபனங்களைக் கைப்பற்றும் முயற்சியிலேயே ஈடுபட்டிருந்தார்களே தவிர, பொதுஜனங்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு பொதுஜன நன்மைக் குகந்த திட்டங்களில் ஈடுபடவில்லை.

இனிமேலாவது அத்தகைய திட்டங்களில் ஊக்கம் செலுத்த வேண்டும்.

கைத்தறிகாரர்களுக்கு வேண்டிய நூல் தரவேண்டிய அவசியத்தைப்பற்றி மாகாணக் கமிட்டி செய்திருக்கும் தீர்மானமும் பாராட்டத் தக்கது. ஆனால் தீர்மானம் மட்டும் போதாது. அதற்காக இடை விடாமல் வேலை செய்ய வேண்டும். தறிகாரர்களுக்கும் சர்க்காருக்கும் தொடர்பு ஏற்படுத்தும் பாலங்களாகக் காங்கிரஸ் கமிட்டிகள் தொண்டு செய்ய வேண்டும்.

* * * *

மாகாணக் கமிட்டி கூட்டத்தில் இன்னும் இரு விஷயங்கள் ஆலோசனைக்கு வந்தன. சில அங்கத்தினர்கள் பொருட்காட்சிக் கணக்குகளைப் பற்றிக் கேள்விகள் கேட்டிருந்தார்கள். இந்தக் கேள்விகள் எதிர்க் கட்சிக்காரர்களுக்

# கர்வ பங்கம்!




பல நாட்களாகத் தகராறு செய்து கொண்டிருந்த பாகிஸ்தான் பிரதமர் லியாகத் அலிகான் கடைசியாக லண்டனில் நடக்கும் காமன்வெல்த் மகாநாட்டுக்குப் போய்ச்சேர்ந்தார்.

குச் சாதகமான சந்தேக விபரீதங்களை உண்டாக்கக் கூடியவையே. எனவே தலைவர் ஸ்ரீ காமராஜ் அவர்களே ஒரு விசாரணைக் கமிட்டி ஏற்படுத்த முன்வந்ததைப் பாராட்டுகிறோம். கமிட்டியார் விசாரித்துப் புகார்களில் ஒன்றுமில்லையென்று சொல்லிவிட்டால், காங்கிரஸ் விரோதிகள் கேலி செய்து கெக்கலி கொட்ட இடமில்லாமற் போகும்.

அடுத்தபடியாக காங்கிரஸ் தேர்தல் டிரிபுனல் புதிதாக நியமனம் செய்யும் பிரச்னை வந்தது.

இது மிகவும் முக்கியமான விஷயம்.

ஏனெனில், சென்ற முறை தமிழ் நாட்டில் நடந்த காங்கிரஸ் தேர்தல்களில் பல ஊழல்கள் நடந்திருப்பதாகப் புகார்கள் ஏற்பட்டன. அவற்றைக் கேட்கச் சகிக்கவில்லை. காங்கிரஸின் மதிப்பையே அவை குறைத்துவிட்டன.

டிரிபுனல்கள் எனப்படும் புகார் விசாரணைச் சபைகள் சில இடங்களில் தீர்ப்பு அளித்து நியாயத்தை நிலைநாட்டியிருக்கின்றன. அத் தீர்ப்புகளின் மூலம், ஊழல்கள் நடந்திருப்பது உண்மையென்றும் ஏற்பட்டு வருகின்றன.

இந் நிலையில் டிரிபுனல்களை மாற்றி அமைத்தால், நியாயம் செய்யக் கூடியவர்களை ஒதுக்கி விட்டுக் கட்சிச் சார்புள்ளவர்களை நியமித்து விட்டதாகவே புகார் சொல்ல இடம் ஏற்படும்.

இதைச் சிலர் எடுத்துக் காட்டினார்கள். மாகாணக் கமிட்டியின் முதல் கூட்டத்திலேயே புதிய டிரிபுனல்கள் நியமித்திருக்க வேண்டும் என்றும், இந்த இரண்டாவது கூட்டத்தில் முன்னறிவிப்பு இல்லாமல் புது டிரிபுனல் நியமனம் செய்வது முறைத் தவறு என்றும் சொன்னார்கள்.

இதையும் தலைவர் ஸ்ரீ காமராஜ் ஒப்புக்கொண்டார்.

பாரபட்சமற்ற உத்தம புருஷரான மாஜி நீதிபதி ஸ்ரீ வி. பாஷ்யமய்யங்காரைத் தலைவராகக் கொண்ட மாகாண டிரிபுனல் இப்போது இருந்து வருகிறது. இதையே நீடித்து வரச் செய்வதுதான் தர்மமாகும். மாற்றுவது, ஊழலுக்கு வக்காலத்து வாங்குவதாக முடியும்.

* * * *

இப்படியெல்லாம் நல்ல முறையில் முடிவுகள் ஆன பிறகு மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ காமராஜ் பேசிய முடிவுரைப் பேச்சு அநாவசியமான கோபம் நிறைந்து காணப்படுகிறது. "தினமணி"யில் பின்வருமாறு அப் பேச்சின் ஒரு பகுதி வெளியாகியிருக்கிறது :—

"எனக்கு ஸ்தாபன கௌரவம் பெரிதே ஒழிய வேறு ஒன்றும் பெரிதல்ல. நான் தலைவனாக இருக்கும் போது, ஸ்தாபன கௌரவத்தைப் பாதிக்கும் வகையில் யார் நடந்தாலும் அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுப்பேன். காங்கிரஸிலிருந்தும் அவர்களை வெளியேற்றுவேன்.

என் மீது நம்பிக்கையில்லையென எனக்கு எதிராக கையெழுத்துகள் வாங்கப்படுவதாக பூச்சாண்டி காட்டுகிறார்கள். இதற்கு நான் பயந்தவனல்ல; இது மாதிரி முந்தி அவர்கள் செய்து பார்க்கவில்லையா? அவர்களை எச்சரிக்கிறேன். என் மீது நம்பிக்கையில்லை என்று கூறிவிட்டால் எனக்கு ரொம்ப சௌகரியமாகப் போய் விடும். தலைமைப் பதவியிலிருந்து வெளியேறிப் பின்னர் அப்பதவிக்கு வருபவருக்கும், இதாருக்கும் உதவும் வகையில்லாமல் நடப்பேனே ஒழிய, வேடிக்கை பார்ப்பதோ, சந்தர்ப்பம் கிடைத்தால் மண்ணை வாரிப் போடவோ மாட்டேன். இப்படிப்பட்ட சந்தர்ப்ப வாதிகளின் உண்மை நிலையை அறிந்து இதார் ஏமாறாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்று காலை சம்பந்தப்படாத விஷயம் வந்தபோது அதுபற்றி சபை வோட்டுக்கு விட்டால் எனக்கு நிச்சயம் பெரும் மெஜாரிட்டி கிடைக்கும் என்பது எனக்குத் தெரியும். யார் மறைமுகமாக ஸ்தாபனத்தை பலவீனப்படுத்தும் வகையில் நடக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் பிரேரணையை இன்று கொண்டுவர இருந்தேன். ஆனால், ஸ்ரீ ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவசரப்பட வேண்டாமென்றதால் இன்று விட்டேன். மனிதத் தன்மையை மீறியும் சிலர் நடக்கிறார்கள் என்று எச்சரிக்க விரும்புகிறேன்."

எதற்காக இவ்வளவு கோபதாபம் என்பதுதான் தெரியவில்லை. மாகாணக் கமிட்டித் தலைவர் தேர்தல் முடிந்தவுடனேயும் ஸ்ரீ காமராஜ் இவ்வாறுதான் பகட்டமாகவும் தம்மை எதிர்த்தவர்கள் மனது புண்படும்படியும் பேசினார். அதன் பயனாகவே, மாகாணக் கமிட்டியில், பொருட்காட்சி சம்பந்தமான கேள்விகள் எழுந்தன என்று ஊகிக்கலாம். "எப்படியும் எந்தச் சாக்காவது சொல்லி இவர் நம்மை வெளியேற்றி விடப் போகிறார். அதற்குள் நம்மால் முடிந்ததைச் செய்துவிட்டுப் போவோம்!" என்று சிலர் நினைக்கக்கூடுமல்லவா?

"வெளியேற்றுவேன்" "ஒழித்து விடுவேன்" என்றெல்லாம் பொறுப்பு வாய்ந்த மாகாணக் கமிட்டித் தலைவர் பேசுவது உசிதமல்ல. "இன்று முக்கிய

மானது காங்கிரஸ் கட்டுப்பாடேயாகும்" என்று ஸ்ரீ காமராஜ் அதே பேச்சில் சொல்லியிருக்கிறார். கட்டுப்பாடு முக்கியந்தான். ஆனால் கட்டுப்பாட்டை எப்படி ஏற்படுத்துவது? ஒற்றுமை, சிநேகபாவம் என்னும் அஸ்திவாரங்களின்பேரில் கட்டுப்பாட்டை அமைக்க வேண்டும். பயமுறுத்திக் கட்டுப்பாட்டை நிலை நிறுத்த முடியாது.

இந்த வருஷ முடிவில் மகத்தான பொதுத் தேர்தல் வரப் போகிறது. கோடிக்கணக்கானவர்கள் வோட்டுக் கொடுத்தாக வேண்டும். காங்கிரஸை எதிர்க்கும் பலமுடைய வேறு கட்சிகள் இப்போது இல்லை என்பது உண்மைதான். ஆனால் எதிர்ப்பே இராது என்று நினைப்பது பெரும் பிசகாகும். ஆங்காங்கு, அந்தந்தத் தொகுதியில், சாதியின் பெயராலும் வேறு பலவித வெறிகளைக் கிளப்பியும் எதிர் அபேட்சகர்கள் நிச்சயமாக நிற்பார்கள். மாகாண முழுவதிலுமுள்ள காங்கிரஸ் வாதிகள் ஒரே முகமாக, ஒரே குரலில், பேசிப் பிரசாரம் செய்தால்தான், சென்ற தேர்தலில் ஏற்பட்டது போன்ற மகத்தான வெற்றி காங்கிரஸுக்கு ஏற்படும். காங்கிரஸ் வாதிகள் பிளவுபட்டு நின்றால் பல ஸ்தானங்கள் பறி போவது நிச்சயம்.

காங்கிரஸ் அபேட்சகர்களுக்கு எதிராகக் காங்கிரஸ் வாதிகளே, "தூய காங்கிரஸ்காரர்கள்" அல்லது "காந்தீய காங்கிரஸ்காரர்கள்" என்று சொல்லிக் கொண்டு நின்றால், அதிகார காங்கிரஸ் அபேட்சகர்கள் பெரும்பாலும் தோல்வி அடைவார்கள்.

சமீபத்தில் திருவாங்கூரில் நடந்த உப தேர்தல்களில் அதிகார காங்கிரஸ் அபேட்சகர்கள் பெரும்பாலும் அவமானகரமான படுதோல்வி அடைந்திருக்கிறார்கள்.

ஆகையால் "வெளியேற்றுவேன்" "ஒழித்துக் கட்டுவேன்" என்றெல்லாம் நானது 1951-ம் ஆண்டில் காங்கிரஸ் நிர்வாகிகள் யாருமே பேசக் கூடாது. சகோதர காங்கிரஸ்வாதிகளை வெளியேற்றும் விழா நடத்தவேண்டாம்.

வேற்றுமைகளை வெளியேற்றி, பேதங்களை ஒழித்துக் கட்ட வேண்டும்.

ஊழல்களைப் போக்கி, புகார்களுக்கு இடமில்லாமல் செய்ய வேண்டும்.

அதிருப்தி கொண்டவர்களையும் நல்ல முறையில் சமரசப்படுத்திக் காங்கிரஸ் ஸ்தாபனத்தை மும்மடங்கு பலம் உள்ளதாகச் செய்ய வேண்டும்.

'வெளியேற்றும் முறை'யினால் பலன் ஏற்படாது என்பது நிச்சயம். திருச்சியின் உதாரணம், கண் முன்னால் இருக்கிறது. திருச்சி ஜில்லாவில், அதிகாரவர்க்கக் காங்கிரஸுக்குப் பிடிக்காதவர்களையெல்லாம் சில வருஷங்களுக்கு முன்னால் வெளியேற்றினார்கள். அதன் விளைவு என்ன? ஜில்லா போர்டு தேர்தலில், வெளியேற்றப்பட்ட காங்கிரஸ் வாதிகளே வெற்றி பெற்றார்கள்; காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு உள்ளே இருந்தவர்கள் படுதோல்வியடைந்தார்கள். இந்த உதாரணம் ஞாபகம் இருக்க வேண்டும்.

## 'கல்கி' குடியரசு மலர்

நானது ஜனவரி மாதம் 26-ந் தேதி பாரதக் குடியரசுத் திருநாளில் "கல்கி" குடியரசு மலர் வெளியாகி நம் நேயர்களை ஆனந்த பரவசமாக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பத்திரிகைகள் அச்சிடப்படும் 'நியூஸ் பிரிண்ட்' காகிதத்துக்கு இப்போது மிக்க கிராக்கி ஏற்பட்டு, விலை இரண்டு மடங்கு ஆகியிருக்கிறது. இதை முன்னிட்டு தினப் பத்திரிகைகள் எல்லாம் பக்கங்களையும் குறைத்து விலையையும் அதிகப்படுத்தி யிருக்கின்றன.

எனினும், தீபாவளி மலரைப் பற்றி எழுதும்போது நேயர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை எண்ணியும், சென்ற ஆண்டு "கல்கி" குடியரசு மலரை நேயர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் வரவேற்று மகிழ்ந்தார்கள் என்பதை எண்ணியும், இவ்வருஷமும் குடியரசு மலர் வெளியிடத் துணிந்தோம். ஏறக் குறைய அதே பக்கங்களுடன் அதே ஒரு ரூபாய் விலைக்கும் அளிக்கத் தீர்மானித்திருக்கிறோம். மலரில் விசேஷ அம்சங்கள் சென்ற ஆண்டு மலரைக் காட்டிலும் ஒரு படி மேலாகவே இருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நேயர்கள் தங்களுக்குவேண்டிய பிரதிகளுக்குப் பக்கத்திலுள்ள 'கல்கி' ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்வது நலம். அல்லது தபால் செலவு சேர்த்து ரூ. 1—6—0 'கல்கி' காரியாலயத்துக்கு நேரில் அனுப்பியும் பதிவு செய்து கொள்ளலாம்.

# ஸ்ரீ குரு கைங்கரியம்

அமெரிக்க நாட்டில் உலகப் பிரமுகர்களின் உருவப் படங்களும் சிலைகளும் வைக்கப்பட்டிருக்கும் பிரசித்தமான கண்காட்சிச் சாலை ஒன்று இருக்கிறது. அக் காட்சிச்சாலையில் ஒரு பிரமுகர் இடம் பெறவேண்டுமானால், ஒரு முக்கியமான நிபந்தனையை நிறைவேற்ற வேண்டும். அதாவது, அவர் இறந்து போக வேண்டும். இறந்து போனால் மட்டும் போதாது: இறந்து ஐம்பது வருஷம் ஆக வேண்டும். இறந்து ஐம்பது வருஷம் ஆன பிறகும் ஒருவரை உலகம் பிரமுகர் என்று ஒப்புக்கொண்டு அவரை மறந்து விடாமல் கௌரவித்து வருமானால், அத்தகைய மகானுடைய படம் அல்லது சிலையைத்தான் மேற்படி கண்காட்சிச் சாலையில் வைப்பார்கள்!

உயிர் வாழும் காலத்தில் பற்பல காரணங்களினால் சிலர் கௌரவிக்கப்படலாம். இந்த விளம்பர யுகத்தில் அபிமானிகள் செய்யும் ஆர்ப்பாட்டமும் பத்திரிகைகளின் பிரசாரமும் மற்றும் பல செயற்கைச் சாதனங்களும் ஒருவரைப் பிரமுகர் என்னும் பதவிக்கு உயர்த்தி விடலாம். ஆனால் அந்த உயர்வு அவர் காலமான பிறகும் நிலைத்திருக்கிறதா, காலமாகி ஐம்பது வருஷத்துக்குப் பிறகும் அவரை மக்கள் நினைவு கூர்ந்து போற்றுகிறார்களா என்பது ஒரு நல்ல சோதனை முறையாகும்.

சங்கீத சாஹித்யத் துறைகளில் மகாமேதாவியாக விளங்கிய மகான் தியாகராஜ ஸ்வாமிகள் மகா சமாதி அடைந்து இன்றைக்கு இரண்டு ஐம்பது ஆண்டுகளுக்குமேல் ஆகி, இன்னும் ஐந்து வருஷம் கூட ஆகிறது. ஆனால் இன்றைக்கும் அவருடைய அற்புத சாஹித்யங்கள் போற்றப்பட்டு வருகின்றன. அவருடைய பரம்பரையில் வந்த சிஷ்ய கோஷ்டிகள் நாடெங்கும் பல்கிப் பெருகி வருகிறார்கள். தென்னிந்தியர்கள் உள்ள இடங்களில் எல்லாம் தியாகராஜர் உற்சவம் நடைபெறுகிறது. இந்த ஜனவரி மாத ஆரம்பத்தில் பம்பாயில் வசிக்கும் தென்னிந்திய சங்கீத ரசிகர்கள் தியாகராஜ உற்சவத்தைச் சிறப்பாக நடத்தினார்கள். இம்மாதக் கடைசியில் திருவையாற்றில் ஸ்ரீ தியாகப் பிரம்ம ஆராதனை உற்சவம் அமோகமாக நடக்கப் போகிறது.

ஸ்ரீ தியாகராஜர் சங்கீத சாஹித்ய மேதையாக விளங்கியதோடு ஸ்ரீ ராமபிரானின் பரம பக்த சிரோமணியாகவும் திகழ்ந்தார். அவருடைய சாஹித்யங்கள் எல்லாம் பக்தி பாவம் ததும்பி நிற்பவை. "பக்தியில்லாத வெறும் வறட்டுச் சங்கீதத்தினால் என்ன பயன்!" என்று அந்தப் பரம பாகவதர் தன் யானை ராக கீர்த்தனத்தில் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீ தியாக ராஜரின் சிஷ்ய பரம்பரையில் வந்து பூரண பக்தியுடன் நாதோபாஸனை செய்யும் சீடர்கள் இன்றைக்கும் இருக்கிறார்கள். அந்த பக்திமான்களுக்குள் இன்று தலைசிறந்த ரத்தினமாக ஸ்ரீமதி பெங்களூர் நாகரத்தின அம்மாள் விளங்குகிறார்கள் என்றால், அது மிகையாகாது. அந்தப் பெண்மணியின் அதிசய சரித்திரம் சென்ற இரண்டு "கல்கி" இதழ்களில் வெளியாகி யிருந்ததை நேயர்கள் படித்திருப்பார்கள். அந்த அம்மாள் எத்தகைய ஏகாக்கிர பக்தியுடனும் தியாக சக்தியுடனும் திருவையாற்றில் ஸ்ரீ தியாகராஜ கைங்கரியம் செய்து வருகிறார் என்பதையும் நேயர்கள் அறிந்திருப்பார்கள். அத்தகைய பெங்களூர் நாகரத்தின அம்மாளின் உருவப் படம்,—பக்தி பரவசமான தோற்றம்,—இந்த இதழ் அட்டையில் பொலிந்து திகழ்கிறது.

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில் இன்னொரு நாதோபாஸகர், — சங்கீத பக்தர், — செய்திருக்கும் செயற்கரும் தியாக ராஜ கைங்கரியத்தை நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

சென்ற டிசம்பர் கடைசியில் சென்னையில் நடந்த சங்கீத வித்வத் சபையில் "தெலிய லேரு ராம!" என்னும் தியாகராஜ கீர்த்தனத்தைப் பற்றி ஒரு விவாதம் எழுந்தது. அந்தக் கீர்த்தனத்தின் ராகம் என்ன என்பதுபற்றித்தான் வாதம். தற்காலத்திய சில பிரபல வித்வான்கள் அதைத் 'தேனுகா' என்னும் அபூர்வ ராகத்தில் பாடி வருகிறார்கள்.

ஆனால் சங்கீத வித்வத் சபைக்குத் தலைமை வகித்த முதுபெரும் வித்வான் கரூர் சின்னசாமி ஐயரும், சங்கீத ஜாம்பவான் எனத்தகும் பல்லடம் சஞ்சீவி ராயரும், தங்களுக்கு மேற்படி கீர்த்தனத்தைச் சொல்லிக் கொடுத்த பெரியார்கள் தோடி ராகத்தில் சொல்லிக் கொடுத்ததாகத் தெரிவித்தார்கள். வேறு சில மேடைப் பிரபல வித்வான்கள் "இல்லை; தேனுகா ராகத்தில் அதைப் பாடுவதுதான் சம்பிரதாயம்" என்று சாதித்தார்கள். எல்லா விவாதமும் முடிந்த பிறகு வாலாஜா பேட்டை சிஷ்ய பரம்பரையில் வந்த ஒருவர், "இடையிலே கிடையாது; இரண்டும் தப்பு; 'தெலியலேரு' கீர்த்தனத்தை எங்கள் முன்னோர்கள் தேசிகதோடி ராகத்தில்தான் பாடினார்கள். அதுதான் சரியாயிருக்கவேண்டும்" என்றார்.

மொத்த முடிவில் மேற்படி கீர்த்தனத்தை ஸ்ரீ தியாகராஜர் என்ன ராகத்தில் எப்படிப் பாடினார் என்று கேட்போமானால், "தெரியவில்லை ராமா!" என்றுதான் பதில் சொல்ல வேண்டியதாகிறது.

இதிலிருந்து, ஸ்ரீ தியாகராஜரின் கீர்த்தனங்களை வழி வழியாக குரு சிஷ்ய பரம்பரையில் வந்த ராக—தாள—மெட்டுக்களில் நிச்சயப்படுத்தி அழியாத ரூபம் கொடுத்து வைப்



பிரதம நீதிபதி ராஜமன்னார்

பது எவ்வளவு அவசியமானது என்பது தெரிகிறதல்லவா!

இத்தகைய அரிய கைங்கரியத்தை ஸ்ரீ ரங்க ராமானுஜ ஐயங்கார் என்னும் பரம பக்தர் செய்திருக்கிறார். சுமார் நானூறு தியாகராஜ கீர்த்தனங்களையும் சுமார் நூறு தீக்ஷிதர் — சாஸ்திரி—க்ஷேத்ரக்ஞர் உருப்படிகளையும் ஸ்வரப்படுத்தி நாலு பெரிய புத்தகங்களாக வெளியிட்டிருக்கிறார். மியூஸிக் அகாடமி, தியாகப் பிரம்ம ஆராதனை சபை முதலிய ஸ்தாபனங்கள் செய்திருக்க வேண்டிய காரியத்தைத் தாம் ஒருவராகவே செய்திருக்கிறார்.



மூசிரி ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர்

பிரதிப் பிரயோஜனத்தைக் கருதாமல் சொந்தப் பணத்தைப் போட்டுக் கை கஷ்டப்பட்டுச் செய்திருக்கிறார். மகா வித்வான் கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யர், புகழ் பெற்ற வீணை தனம்மாள் ஆகியவர்களிடம் குரு சிஷ்ய பாவத்தில் பழகிக் கற்றுத் தேர்ந்த வித்தைத் திறனை இவ்விதம் ஆசிரியர் ரங்க ராமானுஜ ஐயங்கார் பயன்படுத்தியிருக்கிறார்.

தியாகராஜ கீர்த்தனங்களில் மறைந்து மறந்து போன கீர்த்தனங்களைக் கண்டுபிடித்து வெளிப்படுத்த ஒரு சிலர் பிரமாத ஆரவாரத்துடன் ஓர் இயக்கம் ஆரம்பித்தார்கள். அது ஒன்றும் காரியத்தில் நடைபெறவில்லை.

ஆனால் ஸ்ரீ ரங்க ராமானுஜ அய்யங்கார் அவர்களிடம் இன்னும் இருநூறு தியாகராஜ கீர்த்தனங்கள் இருக்கின்றன. முதல் நாலு புத்தகங்கள் முழுதும் விற்காதபடியால் மேலும் பிரசுரிப்பதற்கு வேண்டிய பண வசதியில்லாமல் கைங்கரியம் தடைப்பட்டிருக்கிறது.

இத்தகைய செயற்கரும் கைங்கரியம் செய்துள்ள ஆசிரியர் ரங்க ராமானுஜ அய்யங்கார் அவர்களைச் சங்கீத ரஸிகர்களும் வித்வான்களும் தியாகராஜ பக்தர்களும் விசேஷமாகக் கௌரவிக்க வேண்டும்; அவருக்குக் கூடுமான உதவி செய்வதும் அவசியமாகும்.

மேற்படியாரிடமிருந்து புத்தகங்கள் வாங்கி உதவி செய்ய விரும்பும் நேயர்கள் பின்வரும் விலாசத்துக்கு எழுதிக் கொள்ளலாம் :— ஆசிரியர் ஆர். ரங்க ராமானுஜ அய்யங்கார், 'சபர்மதி', வேட்டாலனி, எழும்பூர்.

கீர்த்தனங்களை ஸ்வரப்படுத்திப் புத்தகத்தில் அச்சிட்டிருப்பதைப் படித்து மெட்டுக்களையும் சங்கதிகளையும் தெரிந்து கொண்டு பயில்வது கஷ்டம் என்று தோன்றலாம். ஆனால் ஆசிரியர் ரங்க ராமானுஜ அய்யங்கார் கீர்த்தனங்களை ஸ்வரப்படுத்துவதில் பட்ட கஷ்டத்தில் பத்தில் ஒரு பங்கு கஷ்டப்பட்டால், படித்துப் பயிலக் கற்றுக் கொள்ளலாம்.

அப்படிப் பல பேர் பயிலா விட்டாலும் பாதகமில்லை. ரூபாய் நோட்டுக்களில் உள்ள எழுத்தைப் படிக்கச் சிலர் அறியாமல் இருக்கலாம். அதனால் ரூபாய் நோட்டு மதிப்பின்றிப் போய்விடாது. பத்திரமாய் எடுத்து வைத்திருந்தால், யாராவது விஷயம் அறிந்த படிக்கத் தெரிந்தவர் வரும்போது நோட்டின் பெறுமானம் தெரிந்து குதூகலம் உண்டாகுமல்லவா!

அதுபோல் நல்ல முறையில் ஸ்வரப்படுத்திய இத் தியாகராஜ கீர்த்தனங்களும் ஓரளவு சங்கீதம் அறிந்து படிக்கத் தெரிந்தவர்களுக்கு மிக உபயோக முள்ளனவாகும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

• • •

தியாகராஜ உற்சவத்தை இவ்வருஷம் சிறப்பாக நடத்துவதில் ஆராதனைக் கமிட்டித் தலைவர் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்களும், காரியதரிசிகள் மூசிரி சுப்பிரமணிய ஐயர், ஸ்ரீ வீருசாமிப் பிள்ளை அவர்களும், பொக்கிஷதார் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தியும், மற்ற நிர்வாகிகளும் விசேஷ சிரத்தை எடுத்து உழைத்து வருகிறார்கள். சங்கீத வித்வான்களும் ரஸிகர்களும் ஒத்துழைத்து உற்சவத்தைச் சிறப்பாக நடத்த முன் வந்திருக்கிறார்கள். இவ்வருஷம் சந்நிதியில் நடக்கும் கச்சேரிகளில் குழப்பமும் வீண் தாமதமும் ஏற்படாமல், ஒழுங்கு முறையை அனுசரித்து, நன்றாய்த் திறமையாக நடத்தப்படும் என்று அறிகிறோம். திருவிழாவை ஆரம்பித்து வைக்க நம் பாரத உள்நாட்டு மந்திரி ராஜாஜி அவர்கள் விஜயம் செய்கிறார்கள்.

உற்சவத்துக்கு வரும் பதினாயிரக்கணக்கான பக்தர்களும் ரஸிகர்களும் நிர்வாகிகளுடன் ஒத்துழைத்துக் குழப்பம், கூச்சலின்றி உற்சவம் சிறப்பாக நடத்த உதவி செய்யும்படி கோருகிறோம்.



ஆசிரியர் ஸ்ரீ ரங்க ராமானுஜ அய்யங்கார்

# பொன்னியின்




### இருபத்திநாலாம் அத்தியாயம்

## காக்கையும் குயிலும்

இரவெல்லாம் கட்டையைப் போல் கிடந்து தூங்கி விட்டுக் காலையில் சூரியன் உதித்த பிறகே வந்தியத் தேவன் துயிலெழுந்தான். விழித்துக் கொண்ட பிறகும் எழுந்திருக்க மனம் வராமல் படுத்திருந்தான். மேலக்காற்று விர்ரென்று வீச, மரஞ்செடிகளின் கிளைகளும் இலைகளும் ஒன்றோடொன்று உராய்ந்து 'ம்ம' என்ற சத்தத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன. அந்த சுருதிக் கிணங்க, ஒரு இளம் பிள்ளையின் இனிய குரல் சுந்தர மூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடலைப் பண்ணுடன் பாடியது:

"பொன்னார் மேனியனே புலித்
தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்
கொன்றை அணிந்தவனே!"

இசைக் கேட்ட வந்தியத் தேவன் கண்ணை விழித்துப் பார்த்தான். அவனுக் கெதிரே பூந்தோட்டத்தில் கொன்னை மரங்கள் சரஞ் சரமாகப் பொன் மலர்களைத் தொங்க விட்டுக் கொண்டு காட்சியளித்தன. சேந்தன் அமுதன் ஒரு கையில் குடலையும் இன்னொரு கையில் அலக்கும் வைத்துக் கொண்டு, வாயினால் பாடிக் கொண்டே, கொன்றை மலர்களைப் பறித்துக் கொண்டிருந்தான். அதிகாலையிலே எழுந்து ஸ்நானம் செய்து திருநீறு புனைந்திருந்த சேந்தன் அமுதன் சிவபக்தனாகிய மார்க்கண்டனைப் போல் தோன்றினான். இப்படி இனிமையாகவும் அழகாகவும் பாடும் பிள்ளையின் குரலைக் கேட்க அவனுடைய அன்னை கொடுத்து வைக்கவில்லையே என்ற எண்ணத்துடன் வந்தியத்தேவன் எழுந்தான். அமுதனைப் போல் தானும் பூந்தோட்டம் வளர்த்துச் சிவ கைங்கர்யம்

# செல்வன்

கல்கி

செய்து கொண்டு ஏன் ஆனந்தமாய்க் காலங் கழிக்கக் கூடாது? எதற்காகக் கையில் வாளும் வேலும் ஏந்திக் கொண்டு ஊர் ஊராக அலைய வேண்டும்? எந்த நேரமும் பிறரைக் கொல்லுவதற்கும் பிறரால் கொல்லப்படுவதற்கும் ஆயத்தமாக ஏன் திரிய வேண்டும்?—இத்தகைய எண்ணங்கள் அவன் மனதில் உதித்தன. ஆனால் சிறிது நேரத்தில் மனம் மாறியது. சேந்தன் அமுதனைப்போல் உலகில் எல்லாருமே சிவ பக்தர்களாயிருந்து விடுவார்களா? திருடர்களும் கொள்ளைக்காரர்களும் வஞ்சகர்களும் எளியவர்களைத் துன்புறுத்துவதில் களிப்படைகிறவர்களும் இருக்கத்தான் இருப்பார்கள். இவர்களையெல்லாம் அடக்கி நியாயத்தையும் தர்மத்தையும் நிலைநாட்ட அரசாங்கம் வேண்டும். அரசாங்கம் நடத்த அரசர்களும் அமைச்சர்களும் வேண்டும். இவர்களுக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க வேளக்காரப் படைகளும் வேண்டும். தன்னைப் போல் அரசர்களுக்கு ஓலை கொண்டு போகவும் ஆட்கள் வேண்டும்...... ஆம்! இன்று சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்த்தே தீர வேண்டும். பெரிய பழுவேட்டரையர் திரும்பி வருவதற்குள் சக்கரவர்த்தியைப் பார்த்தால்தான் பார்த்தது. அவர் வந்துவிட்டால் அது சாத்தியமில்லாமலே போகலாம்......

பூந்தோட்டத்துக்குப் பக்கத்திலேயிருந்த தாமரைக் குளத்தில் குளித்து விட்டு வந்து வல்லவரையன் ஆடை ஆபரணங்கள் அணிந்து தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டான். சக்கரவர்த்தியைத் தரிசனம் செய்யப் போகும்போது சாதாரணமாகப் போகலாமா? இதற்காகத்தான் அலங்கரித்துக் கொண்டானா, அல்லது பழுவூர் இளைய ராணியை அன்று மீண்டும் பார்க்கப் போகிறோம் என்கிற எண்ணமும் அவன் மனதிற்குள் இருந்ததா என்று நாம் சொல்ல முடியாது.

காலை உணவுக்குப் பிறகு சேந்தன் அமுதன் உச்சிவேளை பூஜைக் கைங்கரியத்துக்காகப் பூக்குடலையுடன் கிளம்ப, வந்தியத்தேவன் சக்கரவர்த்தியின் தரிசனத்துக்காகப் புறப்பட்டான். இருவரும் நடந்தே சென்றார்கள்.

கோட்டைக்குள் குதிரையைக் கொண்டு போகவேண்டாம் என்று வல்லவரையன் முன்னமேயே தீர்மானித்திருந்தான். குதிரை நன்றாக இளைப்பாற அவகாசம் கொடுப்பது அவசியம். சீக்கிரத்தில் அக்குதிரையைத் தான் துரிதப் பிரயாணத்துக்கு உபயோகப்படுத்த வேண்டி வரலாம். யார் கண்டது? எப்படியானாலும், அது இங்கே இருப்பதுதான் நல்லது.

கோட்டை வாசல் போய்ச் சேரும் வரையில் அமுதனுடன் பேச்சுக் கொடுத்து இன்னும் சில விவரங்களைத் தெரிந்து கொண்டான்.

"உன் அன்னையைத் தவிர உனக்கு வேறு உற்றார் உறவினர் யாரும் கிடையாதா?" என்று வல்லவரையன் கேட்டதற்கு அமுதன் கூறியதாவது:- "இருக்கிறார்கள். என் அன்னையுடன் கூடப்பிறந்த ஒரு தமக்கையும் தமையனும் உண்டு. தமக்கை காலமாகி விட்டாள். தமையனார் கோடிக்கரைக் குழகர் கோயிலில் புஷ்ப கைங்கரியம் செய்கிறார். அத்துடன் இரவு நேரங்களில் கலங்கரை விளக்கத்தில் தீபமேற்றிப் பாதுகாக்கும் பணியும் செய்து வருகிறார்...... அவருக்கு ஒரு புதல்வனும் புதல்வியும் உண்டு. புதல்வி......" என்று நிறுத்தினான்.

"புதல்விக்கு என்ன?"

"ஒன்றுமில்லை. எங்கள் குடும்பத்திலேயே ஒரு விசித்திரம். சிலர் ஊமையாகப் பிறப்பார்கள்; மற்றவர்கள் இனிய குரல் படைத்திருப்பார்கள்; நன்றாய்ப் பாடுவார்கள்......"

"உன் மாமனின் மகள் ஊமை இல்லையே?" என்றான் வந்தியத்தேவன்.

"இல்லை, இல்லை!"

"அப்படியானால் நன்றாய்ப் பாடக் கூடியவள் என்று சொல்லு. உன்னைக் காட்டிலும் நன்றாய்ப் பாடுவாளா?"

"அழகாயிருக்கிறது உங்கள் கேள்வி. 'குயில் காக்கையை விட நன்றாய்ப் பாடுமா?' என்று கேட்பது போலிருக்கிறது. பூங்குழலி பாடினால் சமுத்திர ராஜா அலை எறிந்து ஓசை செய்வதை நிறுத்திவிட்டு அமைதியாகக் கேட்பார். ஆடு மாடுகளும் காட்டு மிருகங்களும் மெய் மறந்து நிற்கும்......"



"உன் மாமன் மகளின் பெயர் பூங்குழலியா? அழகான பெயர்!"

"பெயர் மட்டுந் தானா அழகு?"

"அவளும் அழகியாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால், நீ இவ்வளவு பரவசமடைவாயா?"

"மானும் மயிலும் அவளிடம் அழகுக்குப் பிச்சை கேட்கவேண்டும். ரதியும் இந்திராணியும் அவளைப் போல் அழகியாவதற்குப் பல ஜன்மங்கள் தவம் செய்யவேண்டும்."

சேந்தன் அமுதனுடைய உள்ளம் சிவபக்தியிலேயே பூரணமாக ஈடுபட்டு விடவில்லையென்பதை வல்லவரையன் கண்டு கொண்டான்.

"அப்படியானால், உனக்குத் தகுந்த மணப்பெண் என்று சொல்லு. மாமன் மகளாகையால் முறைப்பெண்ணுங் கூடத்தானே? கல்யாணம் எப்போது?" என்று கேட்டான் வந்தியத்தேவன்.

"எனக்குத் தகுந்தவள் என்று ஒரு நாளும் சொல்லமாட்டேன். நான் அவளுக்கு எவ்விதத்திலும் தகுதியில்லாதவன். பழைய நாட்களிலே போலப் பூங்குழலிக்குச் சுயம்வரம் வைத்தால் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்து போட்டி போடுவார்கள்! தமயந்தியை மணந்து கொள்வதற்கு வானுலகத்திலிருந்து தேவர்கள் வந்ததுபோல் வந்தாலும் வருவார்கள். ஆனால் இந்தக் கலியுகத்தில் அவ்விதமெல்லாம் ஒரு வேளை நடவாது......"

"அப்படியானால், உன்னை மணந்து கொள்ள அவள் விரும்பினாலும், நீ மறுத்து விடுவாய் என்று சொல்லு!"

"நன்றாயிருக்கிறது. இறைவன் என் முன்னால் தோன்றி, 'நீ சுந்தர மூர்த்தியைப் போல் இந்த உடம்போடு கைலாஸத்துக்கு வருகிறாயா? அல்லது பூலோகத்திலிருந்து பூங்குழலியுடன் வாழ்கிறாயா?' என்று கேட்டால் 'பூங்குழலியுடன் வாழ்கிறேன்' என்றுதான் சொல்லுவேன். ஆனால் நான் சொல்லி என்ன பயன்?"

"ஏன் பயன் இல்லை? உனக்குச் சம்மதமாயிருக்கும்போது அநேகமாகக் கல்யாணம் ஆனது போலத்தானே? எல்லாரும் பெண்களைக் கேட்டுக் கொண்டுதானா கலியாணம் செய்கிறார்கள்! உதாரணத்துக்கு, பெரிய பழுவேட்டரையர் அறுபத்தைந்து வயதுக்கு மேல் கலியாணம் செய்து கொண்டிருக்கிறாரே! அந்த ராணியின் சம்மதத்தின் பேரிலா திருமணம் நடந்திருக்கும்!......"

"அண்ணா! அது பெரிய இடத்துச் சமாசாரம், நாம் ஏன் அதைப் பற்றிப் பேச வேண்டும்? முக்கியமாக, உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். நீங்கள் கோட்டைக்குள் போகிறீர்கள். கோட்டைக்குள் பழுவேட்டரையர்களைப் பற்றி எதுவும் பேச வேண்டாம். பேசினால் ஆபத்து வரும்!......"

"ஏது தம்பி, ஓரேயடியாகப் பயமுறுத்துகிறாயே?"

"உண்மையைத்தான் சொல்கிறேன். மெய்யாக, இரண்டு பழுவேட்டரையர்களுந்தான் இப்போது சோழ சாம்ராஜ்யத்தையே ஆளுகிறார்கள். அவர்களுடைய அதிகாரத்துக்கு மிஞ்சிய அதிகாரம் வேறு கிடையாது!"

"சக்கரவர்த்திக்குக் கூடவா அவர்களைவிட அதிகாரம் இல்லை?"

“சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டுக் கிடக்கிறார். பழுவூர்க்காரர்கள் போட்ட கோட்டை அவர் தாண்டுவதில்லை என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். அவருடைய சொந்தப் புதல்வர்களுடைய பேச்சுக்கூடக் காதில் ஏறுவதில்லை என்கிறார்கள்!”

“அப்படியா சமாசாரம்! பழுவேட்டரையர்களுடைய செல்வாக்கு அபாரமாய்த்தான் இருக்க வேண்டும். இரண்டு வருஷத்துக்கு முன்னால் அவர்களுக்கு இத்தனை செல்வாக்கு இல்லை அல்லவா?”

“இல்லை; அதிலும் சக்கரவர்த்தி தஞ்சைக்கு வந்த பிறகு பழுவேட்டரையர்களுடைய அதிகாரம் எல்லையில்லாமல் போய் விட்டது. அவர்களைத் தட்டிப் பேசுவதற்கே யாரும் கிடையாது. அநிருத்த பிரமராயர்கூட வெறுப்படைந்துதான் பாண்டிய நாட்டுக்குப் போய் விட்டார் என்று கேள்வி.”

“பழையாறையிலிருந்து சக்கரவர்த்தி தஞ்சாவூருக்கு எதற்காக வந்தார்? உனக்குத் தெரியுமா, தம்பி!”

“நான் கேள்விப் பட்டதைச் சொல்கிறேன். மூன்று வருஷத்துக்கு முந்தி வீர பாண்டியன் போரில் மாண்டான். அச்சமயம் சோழர் படைகள் பாண்டிய நாட்டில் சில கொடூரங்களைச் செய்ததாகக் கேள்வி. யுத்தமென்றால் அப்படித்தானே? மதுரை சோழ ராஜ்யத்துக்கு உட்பட்டு விட்டது. ஆனால் வீர பாண்டியனுக்கு அந்தரங்கமான சிலர் எப்படியாவது பழிக்குப் பழி வாங்குவதென்று சபதம் எடுத்துக்கொண்டு சதி செய்கிறார்களாம். பழையாறையில் மன்னர் இருந்தால் அவரைப் பாதுகாக்க முடியாது என்றுதான் அவரைப் பழுவேட்டரையர்கள் தஞ்சைக்கு அழைத்து வந்து விட்டார்கள். இங்கே கோட்டையும் வலிவுள்ளது; கட்டுக் காவலும் அதிகம். அதோடு சக்கரவர்த்தியின் உடம்பு நலத்துக்கும் பழையாறையைக்காட்டிலும் தஞ்சாவூர் நல்லது என்று வைத்தியர்கள் சொன்னார்கள்.”



“சுந்தர சோழரின் உடம்பைப்பற்றி எல்லாரும் சொல்கிறார்கள். ஆனால் என்ன நோய் என்று மட்டும் யாருக்கும் தெரிவதில்லை.”

“தெரியாமல் என்ன? சக்கரவர்த்திக்குப் பக்கவாதம் வந்து இரண்டு கால்களும் சுவாதீனம் இல்லாமற் போய் விட்டன.”

“அடடா! அதனால் அவரால் நடக்கவே முடிவதில்லையோ?”

“நடக்க முடியாது. யானை அல்லது குதிரை மீது ஏறவும் முடியாது. படுத்த படுக்கைதான். பல்லக்கில் ஏற்றி இடத்துக்கு இடம் கொண்டு போனால்தான் போகலாம். அதிலும் வேதனை அதிகம். ஆகையால் சக்கரவர்த்தி அரண்மனையை விட்டு வெளிக் கிளம்புவதே இல்லை. சில காலமாகச் சித்தம் அவ்வளவு சுவாதீனத்தில் இல்லையென்றும் சொல்கிறார்கள்.”

“ஆஹா! என்ன பரிதாபம்!”

“பரிதாபம் என்று கூடச் சொல்லக் கூடாது, அண்ணா! அதுவும் ராஜ நிந்தனை என்று சொல்லிப் பழுவேட்டரையர்கள் தண்டனை விதிப்பார்கள்.”

பழுவேட்டரையர்! பழுவேட்டரையர்!—எங்கே, யாரிடம் பேசினாலும் பழுவேட்டரையர்களைப் பற்றியே பேச்சு! அவர்கள் எவ்வளவு பராக்கிரமசாலிகளாய் இருந்தால்தான் என்ன? தன பொக்கிஷம், தானியக் களஞ்சியம், தஞ்சை நகர்க்காவல், ஒற்றர் படை எல்லாம் அவர்களுடைய வசத்தில் இருக்கும்படி சக்கரவர்த்தி விட்டிருக்கக் கூடாது. இவ்வளவு அதிகாரத்தையும் அவர்களிடம் விட்டதனால் அல்லவா சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதிசெய்யத் தொடங்கி விட்டார்கள்? இவர்களுடைய சதி எவ்வளவு தூரம் பலிக்குமோ? அது பலிக்காமல் போக நம்மால் இயன்ற பிரயத்தனம்

செய்யவேண்டும். சந்தர்ப்பம் கிடைத்தால் சக்கரவர்த்திக்கும் எச்சரிக்கை செய்து வைக்கவேண்டும்!......

இதற்குள் கோட்டை வாசல் வந்துவிட்டது. சேந்தன் அமுதன் தனது புதிய நண்பனைப் பிரிந்து தளிக்குளத்தார் ஆலயத்தை நோக்கிச் சென்றான்.

வந்தியத்தேவனோ எத்தனையோ மனக் கோட்டைகளுடன் அந்தக் கோட்டை வாசலை நெருங்கினான்.

### இருபத்தைந்தாம் அத்தியாயம்

# கோட்டைக்குள்ளே

**ப**னை இலச்சினை தாங்கிய மோதிரம் கதைகளில் வரும் மாய மோதிரத்தைப் போல் அபாரமான மந்திர சக்தி வாய்ந்ததாயிருந்தது.

காலை நேரத்தில் பால் தயிர் விற்பவர்கள், பூக்கூடைக்காரர்கள், கறிகாய் விற்பவர்கள், பழக் கடைக்காரர்கள், மற்றும் பல தொழில்களையும் செய்வோர், கணக்கர்கள், உத்தியோகஸ்தர்கள் முதலியோர் ஏகக் கூட்டமாகக் கோட்டைக்குள் பிரவேசிக்க முயன்று கொண்டிருந்தார்கள். கோட்டைக் கதவின் திட்டி வாசலைத் திறந்து அவர்களை ஒவ்வொருவராக உள்ளே விடுவதிலே கோட்டை வாசற் காவலர்கள் தங்கள் படாடோப அதிகாரத்தைக் காண்பித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் நம் இளம் வீரன் பனை இலச்சினை பொறித்த மோதிரத்தைக் காட்டியதுதான் தாமதம், காவலர்கள் மிக்க மரியாதை காட்டி, கோட்டைக் கதவுகளில் ஒன்றைத் திறந்து விட்டார்கள். வந்தியத்தேவனும் கோட்டைக்குள் பிரவேசித்தான்.

ஆகா! தஞ்சைபுரிக் கோட்டைக்குள் அவன் கால் வைத்த வேளை என்ன வேளையோ தெரியாது! அதிலிருந்து எத்தனை எத்தனை முக்கிய நிகழ்ச்சிகள் தொடர்ந்து வந்தன! சோழ சாம்ராஜ்யத்தின் சரித்திரத்திலேயே அது ஒரு முக்கிய சம்பவமாகவல்லவா ஏற்பட்டது?

கோட்டைக்குள் பிரவேசித்துச் சிறிது நேரம்வரை வந்தியத்தேவன் ஒரே பிரமிப்பில் ஆழ்ந்திருந்தான்.

காஞ்சி பழைய பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரம். பல தடவை பகைவர்களின் தாக்குதல்களுக்கு உட்பட்டது. அங்கிருந்த மாளிகைகளும் மண்டபங்களும் மற்றக் கட்டிடங்களும் பழமையடைந்து சிதிலமாகிப் பூஞ்சக் காளான் பூத்திருந்தன. அழகிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த கட்டிடங்கள்தான்; ஆனாலும் பல பகுதிகள் இடிந்தும் சிதைந்தும் கிடந்தன. ஆதித்த கரிகாலர் வந்த பிறகு புதுப்பித்துக் கட்டிய சில மாளிகைகள் மட்டும், பட்டமரத்தில் ஓவ்வோரிடத்தில் தளிர்த்திருக்கும் மலர்களைப் போல் விளங்கி, நகரத்தின் பாழடைந்த தோற்றத்தை மிகைப்படுத்திக் காட்டின.

**இ**ந்தத் தஞ்சையின் தோற்றமோ நேர்மாறாக இருந்தது. எல்லாம் புதிய மாளிகைகள்; புதிய மண்டபங்கள். வெண் சுண்ண மாளிகைகளுக்கு மத்தியில் செம்மண்ணில் சுட்ட செங்கற்களினால் கட்டிய சிற்சில கட்டிடங்கள் வைரங்களுக்கும் முத்துக்களுக்கும் இடையிலே இரத்தினங்களைப் பதித்ததுபோல் ஒளி வீசித் திகழ்ந்தன. ஆங்காங்கு அரண்மனைத் தோட்டங்களில் வளர்ந்திருந்த விருட்சங்கள் செம்மண் பூமியின் சத்தை உண்டு, கொழுகொழுவென்று செழித்து ஓங்கியிருந்தன. புன்னை, தென்னை, அசோகம், அரசு, ஆல், பலா, வேம்பு முதலிய மரங்களில் அடர்ந்து தழைத்திருந்த இலைகள் மரகதப் பச்சையின் பல சாயல்களுடன் கண்ணுக்கு இனிமையையும் மனதுக்கு உற்சாகத்தையும் அளித்தன. அதிசய சக்தி வாய்ந்த மந்திரவாதியான மயன் புதிதாக நிர்மாணித்த நகரம் இது. இந்தப் புதிய நகருக்குள் பிரவேசிக்கும் போதே ஒரு புதிய உற்சாகம் பிறந்தது; உள்ளம் பூரித்துப் பொங்கியது; காரணம் தெரியாத கர்வம் நிறைந்தது.

கோட்டையின் கட்டுக்காவலையும் கோட்டைக்குள் பிரவேசிப்பதில் உள்ள நிர்ப்பந்தங்களையும் கவனித்திருந்த வந்தியத்தேவன் உள்ளே அதிக

ஜன நடமாட்டமே இல்லாமல் வெறிச்சென்று இருக்கும் என்று எண்ணியிருந்தான். ஆனால் அதற்கு நேர் மாறாக, தெருக்களெல்லாம் ஜே ஜே என்று கூட்டமாயிருந்தது. குதிரைகளும் குதிரைகள் பூட்டிய ரதங்களும் பூமி அதிரும்படி சத்தமிட்டுக்கொண்டு சென்றன. கரிய குன்றுகள் அசைந்து வருவது போல் நிதானமாகவும் கம்பீரமாகவும் நடந்துவந்த யானைகளின் மணி ஓசை நாலாபுறங்களிலும் கேட்டது! பூ, கறிகாய், பழம், பால்தயிர் விற்போரின் கூச்சல்கள் செவிகளைத் தொளைத்தன. அவ்வப்போது காலத்தை அறிவிக்கும் ஆலாட்சமணிகளின் ஓசையுடன் பேரிகையின் முழக்கம் கலந்தது. இசைக் கருவிகள் எழுப்பிய இன்னிசைகளுடன் மங்கையர் பாடிய மதுர கீதங்கள் கலந்தன. எல்லாம் ஒரே திருவிழாக் கோலாகலமாகவே இருந்தது.

நகரம் என்றால் இதுவல்லவா நகரம்! நாளுக்கு நாள் விரிந்து பரந்து வரும் ஒரு சாம்ராஜ்யத்தின் தலை நகரம் இப்படித்தான் இருக்கும் போலும்!

தான் இத்தகைய நகரத்துக்கு முற்றிலும் புதியவன் என்று காட்டிக் கொள்ள வந்தியத் தேவன் விரும்பவில்லை. யாரையாவது வழி கேட்டால் தன்னை ஏற இறங்கப் பார்த்து, "நீ இந்த ஊருக்குப் புதியவனா?" என்று அலட்சியமாகப் பேசுவார்கள். அரண்மனைக்கு வழி கேட்கிறவனை வெளியூரிலிருந்து வந்த பட்டிக்காட்டான் என்று கூட நினைத்து விடுவார்கள். ஆகையால், யாரையும் வழி கேட்காமலேயே சக்கரவர்த்தியின் அரண்மனையைக் கண்டு பிடித்துப் போய்விட வேண்டும். அது அப்படியொன்றும் முடியாத காரியமாயிராது......

எந்தப்பக்கம் நோக்கினாலும் மாடமாளிகைகளின் மீது மகர தோரணங்களும் கொடிகளும் தோன்றின. வேகத்துடன் வீசிய மேலக் காற்றுடன் அவை துவந்த யுத்தம் செய்து சட சட பட பட வென்று சத்தம் செய்து கொண்டு பறந்தன. புலிக்கொடிகளும் பனைக் கொடிகளுமே அதிகமாகக் காணப்பட்டன. மற்ற எல்லாக் கொடிகளையும் தாழ்த்திக் கொண்டு மேக மண்டலத்தை அளாவிக் கம்பீரமாக ஒரு பெரிய புலிக் கொடி பறந்தது. அதுவே சக்கரவர்த்தி தங்கும் அரண்மனையாக இருக்க வேண்டும் என்று வல்லவரையன் ஊகித்துக் கொண்டு, அக் கொடி பறந்த திக்கை நோக்கித் தான் மேலே செய்ய வேண்டிய காரியத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு நடந்தான்.

சக்கரவர்த்தியை நேரில் சந்தித்து ஓலையைக் கொடுப்பது முதற் காரியம். அதோடு ஆதித்த கரிகாலர் நேரில் வாய்மொழியாகத் தெரிவிக்கச் சொன்னதையும் சொல்ல வேண்டும். சின்னப் பழுவேட்டரையரின் அநுமதியின்றிச் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது. அவருடைய அநுமதியை எப்படிப் பெறுவது? கோட்டைக்குள் பிரவேசிப்பதற்குத் தெய்வம் துணை செய்தது. ஆனால் முழுதும் தெய்வம் வழி காட்டும் என்றே இருந்துவிடலாமா? சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு நாமேதான் யுக்தி கண்டு பிடித்தாக வேண்டும்! அது என்ன யுக்தி! வாணர் குலத்தில் வழி வழியாக வந்த மூளையே! கொஞ்சம் வேலை செய், பார்க்கலாம்! சிறிது உன் கற்பனா சக்தியைத் தட்டி விடு! காவியம் கவிதை எழுதுவோருக்கு மட்டும் கற்பனா சக்தி தேவை என்பதில்லை. உன்னைப் போல் இராஜாங்க காரியங்களில் ஈடுபட்டவர்களுக்கும் கற்பனா சக்தி வேண்டும். எங்கே, உன் கைவரிசையைக் காட்டு, பார்க்கலாம்! ......



பெரிய பழுவேட்டரையர் இன்னும் கோட்டைக்கு வந்து சேரவில்லை என்பதை வந்தியத் தேவன் உறுதிப் படுத்திக் கொண்டான்.

கோட்டை வாசலைத் தாண்டி உள்ளே வந்ததும், அங்கே உட்புறத்தில் நின்ற காவலன் ஒருவனிடம் "ஏன் அப்பா! பழுவேட்டரையர் திரும்பி வந்துவிட்டாரா?" என்று கேட்டான்.

"யாரைக் கேட்கிறாய், தம்பி! சின்னவர் அரண்மனையில்தான் இருக்கிறார்."

"அது எனக்குத் தெரியாதா? நடு நாட்டுக்குச் சென்றிருந்த பெரியவரைப் பற்றித்தான் கேட்கிறேன்."

"ஓ! பெரியவர் நடு நாட்டுக்கா சென்றிருந்தார்? அது எனக்குத் தெரியாது. நேற்று மாலை இளைய ராணியின் பல்லக்குத் திரும்பி வந்தது. பெரிய அரசர் இன்னும் வரவில்லை. இன்று இரவு திரும்பக்கூடும் என்று செய்தி வந்திருக்கிறது!" என்றான் காவலன்.



இது நல்ல செய்திதான். பெரிய பழுவேட்டரையர் திரும்பி வருவதற்குள்ளே எப்படியும் சக்கரவர்த்தியைப் பார்த்து ஓலையைக் கொடுத்தாக வேண்டும். அதற்கு என்ன வழி?... வந்தியத்தேவனுடைய மூளையில் ஒரு யோசனை உதயமாகிவிட்டது! அந்தக் கணமே அவன் முகத்தில் கவலைக் குறி மறைந்தது; குறும்புப் புன்னகையும் குதூகல மலர்ச்சியும் தோன்றின.

சக்கரவர்த்தியின் அரண்மனையை அணுகுவதற்கு அவன் அதிகமாக அலைந்து திரியவேண்டியிருக்கவில்லை. பெரிய புலிக்கொடியைப் பார்த்துக்கொண்டே போனான். விரைவிலேயே அரண்மனை முகப்பை அடைந்துவிட்டான். ஆகா! இது எத்தகைய அரண்மனை! தேவலோகத்தில் தேவேந்திரனுடைய அரண்மனையையும் உஜ்ஜயினி நகரத்து விக்ரமாதித்யனுடைய அரண்மனையையும் போல அல்லவா இருக்கிறது? அந்த முன் வாசல் மண்டபத்துத் தூண்களில் செய்திருக்கும் சிற்ப வேலைகளின் அற்புதந்தான் என்ன! ஒவ்வொரு தூணிலும் செதுக்கியிருக்கும் குதிரை முன் கால்களைத் தூக்கிக்கொண்டு அப்படியே பாய்வதுபோல இருக்கிறதே!

அரண்மனையை அடைவதற்குப் பல பாதைகள் நாலு திசைகளிலிருந்தும் வந்தன. ஒவ்வொரு பாதை முடிவிலும் இரண்டு குதிரை வீரர்களும் சில காலாள் வீரர்களும் நின்றார்கள். அவர்களண்டை நெருங்கி வராமலே அவ்வீதிகளில் நடமாடிய ஜனங்களில் பலர் திரும்பிப் போய் விட்டார்கள். ஒரு சிலர் அவர்கள் கிட்ட வந்து சற்றே நின்று அரண்மனை




முகப்பை எட்டிப் பார்த்து விட்டும், புலிக்கொடியை அண்ணாந்து பார்த்து விட்டும் போனார்கள். அதிக நேரம் நின்று கூட்டம் சேரும் போலிருந்தால் காவலர்கள் கையினால் சமிக்ஞை செய்து அவர்களைப் போகும்படி செய்தார்கள். கூட்டங்கூடி நின்றவர்களும் இரைந்து பேசாமல் காதோடு மெள்ளப் பேசிக் கொண்டார்கள்.

வந்தியத் தேவன் மற்றவர்களைப் போல் சிறிதும் தயங்கி நிற்கவில்லை. வேகமாகவும் மிடுக்காகவும் நடந்து சென்று அரண்மனைப் பாதைக் காவலர்களை நெருங்கினான். உடனே இரு குதிரைகளும் முகத்தோடு முகம் உரையும்படி வழி மறித்து நின்றன. குதிரை மேலிருந்தவர்கள் கீழே நின்றவர்கள், அனைவருடைய வேல்களும் முனையோடு முனை பொருந்தி வழியை அடைத்தன.

வந்தியத்தேவன் தன்னுடைய மந்திர மோதிரத்தை நீட்டினான். அவ்வளவு தான்; அதைப் பார்த்தவுடனே அவ்வீரர்களின் முடுக்கும் பெருமிதமும் அடங்கின. ஒருவர்பின் ஒருவராக மூன்றுபேர் மோதிரத்தை உற்றுப் பார்த்தார்கள். "சரி; வழி விடுங்கள்!" என்று ஒருவன் சொன்னான். இரண்டு வேல்கள் உடனே அகன்று நின்று வழிவிட்டன. வந்தியத்தேவன் மிடுக்குடன் நடந்து சென்றான்.

ஆயினும், என்ன? இன்னும் எத்தனை காவல்கள் இப்படி உண்டோ! சின்னப் பழுவேட்டரையர் எங்கே இருக்கிறாரோ? எப்படி விசாரிப்பது? யாரிடம் கேட்பது? சின்னப் பழுவேட்டரையரின் அனுமதியின்றிச் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது! இந்தப் பெரிய விஸ்தாரமான அரண்மனையில் நோயாளியான சக்கரவர்த்தி எந்த இடத்தில்

இருக்கிறாரோ? அதைத்தான் எவ்விதம் தெரிந்து கொள்வது?......

தனக்குப் பின்னால் சிலர் கூட்டமாக வருவதை அறிந்து வந்தியத்தேவன் திரும்பிப் பார்த்தான். ஆம்; பத்துப் பதினைந்து பேர் கும்பலாக வந்து, காவலர்களருகில் நின்றார்கள். அவர்கள் உயர்ந்த பட்டுப் பீதாம்பரங்கள் தரித்திருந்தார்கள். முத்து மாலைகள், மகர கண்டிகள், காதில் குண்டலங்கள் அணிந்திருந்தார்கள். சிலர் நெற்றியில் திருநீறும் மற்றவர்கள் சந்தனம், குங்குமம், சவ்வாதுப் பொட்டும் இட்டிருந்தார்கள்! ஆ! இவர்களைப் பார்த்தால் புலவர்களைப் போல அல்லவா இருக்கிறது!...ஆம், புலவர்களின் கூட்டந்தான் என்று மறுகணமே தெரிந்து விட்டது.

காவலர்களில் ஒருவன்,—அவர்களுடைய தலைவனாயிருக்கவேண்டும்,—"கவிராயர்கள் வந்திருக்கிறார்கள்! வழி விடுங்கள்!" என்று சொன்னதுடன், ஒரு வீரனைப் பார்த்து, "சின்னப் பழுவேட்டரையர் ஆஸ்தான மண்டபத்தில் இருக்கிறார். அவரிடம் கொண்டுபோய் விடு!" என்றான்.

"புலவர்களே! ஏதாவது பரிசு கிடைத்தால் போகும்போது இந்த வழியாகவே திரும்பிச் செல்லுங்கள்! பரிசு கிடைக்காவிட்டால் வேறு வழியாகப் போய் விடுங்கள்!" என்று மேலும் அவன் சொன்னதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்தார்கள்.

சற்று நின்று இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன் "பழம் நழுவிப் பாலில் விழுந்தது!" என்று எண்ணிக்கொண்டான். இந்தப் புலவர்களுடனே போனால், சின்னப் பழுவேட்டரையர் இருக்குமிடம் போய்ச் சேரலாம். யாரையும் வழி விசாரிக்க வேண்டியதில்லை. பிறகு, நமது சாமர்த்தியம் இருக்கிறது; அதிர்ஷ்டமும் இருக்கிறது! இவ்வாறு எண்ணியபடியே புலவர் கூட்டத்துடன் சென்றான்.

## இருபத்தாறும் அத்தியாயம்

# "அபாயம்! அபாயம்!"

ஆஸ்தான மண்டபத்தில் புலவர்களுக்கு முன்னதாகவே வந்தியத்தேவன் பிரவேசித்தான். அங்கே ஓர் உயர்ந்த சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருப்பவர்தான் சின்னப் பழுவேட்டரையராயிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான். அவரைச் சுற்றிலும் பலர் கை கட்டி வாய் புதைத்து நின்றார்கள். அன்று வந்த ஓலைகள் பலவற்றை வைத்துக் கொண்டு ஒருவர் நின்றார். கணக்காயர் கணக்குச் சொல்வதற்குக் காத்திருந்தார். காவல் படைத் தலைவர்கள் சின்னப் பழுவேட்டரையருடைய அன்றாடக் கட்டளைகளை எதிர்பார்த்து நின்றார்கள். ஏவிய வேலைகளைச் செய்வதற்குப் பணியாளர்கள் காத்திருந்தார்கள். சிம்மாசனத்துக்குப் பின்னால் நின்று சில ஏவலாளர் வெண் சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள். கையில் வெற்றிலைப் பெட்டியுடன் ஒருவன் ஆயத்தமாயிருந்தான்.

மிடுக்கிலும் பெருமிதத்திலும் யாருக்கும் பின் வாங்காதவனான வந்தியத்தேவன் கூடச் சிறிது அடக்க ஒடுக்கத்துடனே தான் சின்னப் பழுவேட்டரையரிடம் அணுகினான்.

பெரியவரைக் காட்டிலும் சின்னவர் வீர கம்பீரத்தில் இன்னும் ஒருபடி உயர்ந்தவராகவே காணப்பட்டார்.

நமது வீரனைப் பார்த்ததும் அவர் முக மலர்ச்சியுடன் "யார், தம்பி, நீ! எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார்.

வீர வாலிபர்களைக் கண்டால் சின்னப் பழுவேட்டரையரின் கடுகடுத்த முகம் மலர்ந்து விடும். நாடெங்கும் உள்ள வாலிப வீரர்களைத் தம்முடைய காவல் படையில் சேர்த்துக் கொள்வதில் அவருக்கு மிக்க ஆர்வம்.

"தளபதி! நான் காஞ்சீபுரத்திலிருந்து வந்தேன்! இளவரசர் ஓலை கொடுத்து அனுப்பினார்!" என்று பணிவான குரலில் வந்தியத்தேவன் மறுமொழி சொன்னான்.

காஞ்சீபுரம் என்றதும் சின்னப் பழுவேட்டரையரின் முகம் கடுத்தது.

"என்ன? என்ன சொன்னாய்?" என்று மீண்டும் கேட்டார்.

"காஞ்சிபுரத்திலிருந்து இளவரசர் கொடுத்த ஓலையுடன் வந்தேன்!"

"எங்கே? இப்படிக் கொடு!" என்று அலட்சியமாய்க் கேட்ட போதிலும், அவருடைய குரலில் சிறிது பரபரப்புத் தொனித்தது.

வல்லவரையன் அடக்க ஒடுக்கத்துடன் ஓலைச் சுருளை எடுத்துக் கொண்டே, "தளபதி! ஓலை சக்கரவர்த்திக்கு!" என்றான்.

அதைப் பொருட்படுத்தாமல் சின்னப் பழுவேட்டரையர் ஓலையை வாங்கி ஆவலுடன் பார்த்தார். பக்கத்தில் நின்றவனிடம் கொடுத்து அதைப் படிக்கச் சொன்னார். கேட்டுவிட்டு, "புதிய விஷயம் ஒன்றுமில்லை!" என்று தமக்குத்தாமே முணுமுணுத்துக் கொண்டார்.

"தளபதி! நான் கொண்டு வந்த ஓலை......" என்றான் வந்தியத்தேவன்.

"ஓலைக்கு என்ன? நான் கொடுத்து விடுகிறேன் சக்கரவர்த்தியிடம்!"

"இல்லை; என்னையே நேரில் சக்கரவர்த்தியின் கையில் கொடுக்கும்படி...."

"ஓகோ! என்னிடம் நம்பிக்கை இல்லையா? இளவரசர் ஆதித்தர் அப்படி உன்னிடம் சொல்லி அனுப்பினாரா?" என்றபோது தஞ்சைக் கோட்டைத் தளபதியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"இளவரசர் அவ்வாறு சொல்லவில்லை; தங்கள் தமையனார்தான் அவ்விதம் கட்டளையிட்டார்!"

"என்ன? என்ன? பெரியவரை நீ எங்கே பார்த்தாய்?"

"வழியில் கடம்பூர் சம்புவரையர் வீட்டில் ஒருநாள் இரவு தங்கியிருந்தேன். அங்கேதான் பார்க்க நேர்ந்தது. இந்த மோதிரத்தையும் அவர்தான் கொடுத்தனுப்பினார்......"

"ஆகா! இதை நீ ஏன் முன்னமே சொல்லவில்லை? கடம்பூரில் இரவு நீ தங்கியிருந்தாயா? இன்னும் யார் யார் வந்திருந்தார்கள்?"

"மழநாடு, நடுநாடு, திருமுனைப்பாடி நாடுகளிலிருந்து பல பிரமுகர்கள் வந்திருந்தார்கள்......"

"இரு, இரு! பிறகு சாவகாசமாகக் கேட்டுக் கொள்கிறேன். முதலில் நீயே இந்த ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்துவிட்டு வா! அப்புறம் தமிழ்ப் புலவர்கள் வந்து விடுவார்கள். வள வள வென்று பேசிக்கொண்டிருப்பார்கள்...இந்தப் பிள்ளையைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போ!" என்று அருகில் நின்ற வீரன் ஒருவனுக்குச் சின்னப் பழுவேட்டரையர் கட்டளையிட்டார்.

அந்த வீரனைத் தொடர்ந்து வந்தியத்தேவன் மேலும் அரண்மனையின் உட்புறத்தை நோக்கிச் சென்றான்.

மூன்று பக்கங்களில் அலைகடல் முழக்கம் கேட்கும்படியாகப் பரந்திருந்த சோழ சாம்ராஜ்யத்தின் சிங்காதனம் சில காலமாக நோய்ப் படுக்கையாக மாறியிருந்தது. அந்தச் சிம்மாதனத்தில் பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி சாய்ந்து படுத்திருந்தார். இராஜ்யாதிகாரங்களை யெல்லாம் மற்றவர்களிடம் ஒப்படைத்து விட்டு மருத்துவ சிகிச்சை செய்துகொண்டிருந்தாராயினும், சிற்சில முக்கியமான சந்தர்ப்பங்களில் முக்கியமான மனிதர்களுக்கு அவர் தரிசனம் அளித்தே தீரவேண்டியிருந்தது. அமைச்சர்களும் தளபதிகளும் வேளக்காரப் படை வீரர்களும் அவரைத் தினந்தோறும் வந்து தரிசித்துவிட்டுப் போவது இராஜ்யத்தின் நன்மைக்கு அவசியமாயிருந்தது.

எத்தனையோ போர் முனைகளில் செயற்கரும் வீரச் செயல்கள் புரிந்து அஸகாய சூரர் என்று பெயர் பெற்றவரும், நாடுநகரமெல்லாம் 'சுந்தர சோழர்' என்று அழைக்கப்பட்டவரும், அழகில் மன்மதனுக்கு ஒப்பானவர் என்று புகழ் பெற்றவருமான சக்கரவர்த்தியின் நோய்ப்பட்டு மெலிந்த தோற்றத்தைக் கண்டதும் வந்தியத்தேவனால் பேசவே முடியாமற் போய் விட்டது. அவனுடைய கண்களில் நீர் ததும்பியது. அருகில் சென்று அடிபணிந்து வணங்கிப் பயபக்தியுடன் ஓலையை நீட்டினான்.

சக்கரவர்த்தி ஓலையை வாங்கிக் கொண்டே "எங்கிருந்து வந்தாய்? யாருடைய ஓலை?" என்று ஈனஸ்வரத்தில் கேட்டார்.

"பிரபு! காஞ்சியிலிருந்து வந்தேன். இளவரசர் ஆதித்தர் தந்த ஓலை!"

என்று வந்தியத்தேவன் நாத் தழுதழுக்கக் கூறினான்.

சக்கரவர்த்தியின் முகம் உடனே பிரகாசம் அடைந்தது. அவர் அருகில் திருக்கோவலூர் மலையமான் புதல்வியான சக்கரவர்த்தினி வானமாதேவி வீற்றிருந்தாள். அவளைப் பார்த்து, "தேவி! உன் புதல்வனிடமிருந்து ஓலை வந்திருக்கிறது!" என்று சொல்லிவிட்டுப் படித்தார்.

"ஆகா! இளவரசன் காஞ்சியில் பொன் மாளிகை கட்டியிருக்கிறானாம். நீயும் நானும் அங்கு வந்து சிலநாள் தங்கியிருக்கவேண்டுமாம்!" என்று சொல்லிய போதே, சக்கரவர்த்தியின் முகம் முன்னைவிடச் சுருங்கியது.

"தேவி! உன் புதல்வன் செய்கையைப் பார்த்தாயா? என் பாட்டனார், உலகமெல்லாம் புகழ்பெற்ற பராந்தக சக்கரவர்த்தி, அரண்மனையில் சேர்ந்திருந்த தங்கத்தையெல்லாம் அளித்துத் தில்லை அம்பலத்துக்குப் பொன் கூரை வேய்ந்து, பொன்னம்பலம் ஆக்கினார். நம்முடைய குலத்தில் தோன்றிய பெரியவர்கள் யாரும் தாங்கள் வசிக்கும் அரண்மனையைப் பொன்னால் கட்டியதில்லை. அரண்மனை கட்டுவதைக் காட்டிலும் ஆலயம் எடுப்பதையே முக்கியமாகக் கருதினார்கள். ஆனால் ஆதித்த கரிகாலன் இப்படிச் செய்திருக்கிறான்! ஆகா! இந்தத் தெய்வ நிந்தனைக்கு என்ன பரிகாரம் செய்வது?" என்றார்.

மகனிடமிருந்து ஓலை வந்தது என்பதைக் கேட்டுச் சிறிது மலர்ச்சியடைந்த தேவியின் முகம் மறுபடி முன்னைக் காட்டிலும் அதிகமாக வாடியது. மறுமொழி ஒன்றும் அவளால் சொல்ல முடியவில்லை.

அச்சமயத்தில் வந்தியத் தேவன் தைரியமும், துணிவும் வரவழைத்துக் கொண்டு, "பிரபு! தங்கள் திருக்குமாரர் செய்தது அப்படி ஒன்றும் தவறில்லையே? உசிதமான காரியத்தையே செய்திருக்கிறார். மகனுக்குத் தாயும் தந்தையுமே முதன்மையான தெய்வங்கள் அல்லவா? ஆகையால் தாங்களும் தேவியும் வசிப்பதற்காகத் தங்கள் புதல்வர் பொன் மாளிகை கட்டியது முறைதானே?" என்றான்.

சுந்தர சோழர் புன்னகை பூத்து, "தம்பி! நீ யாரோ தெரியவில்லை, மிக்க அறிவாளியாயிருக்கிறாய். சாதுர்யமாகப் பேசுகிறாய். ஆனால் மகனுக்குத் தாய் தந்தை தெய்வமே என்றாலும், மற்றவர்களுக்கு இல்லைதானே? எல்லாரும் வழிபடும் தெய்வத்துக்கு அல்லவா பொன் கோயில் எடுக்க வேண்டும்!" என்றார்.

"பிரபு! மகனுக்குத் தந்தை தெய்வம்; மக்களுக்கெல்லாம் அரசர் தெய்வம். அரசர்கள் திருமாலின் அம்சம் பெற்றவர்கள் என்று வேத புராணங்கள் சொல்கின்றன. ஆகையால் அந்த வகையிலும் தங்களுக்குப் பொன் மாளிகை எடுத்தது பொருத்தமானதே!" என்றான் நம் வீரன்.

சுந்தர சோழர் மறுபடியும் மலையமான் திருமகளை நோக்கி, "தேவி! இந்தப் பிள்ளை எவ்வளவு புத்திசாலி பார்த்தாயா? நம்முடைய ஆதித்தனுக்கு இவனையொத்தவர்களின் உதவியிருந்தால், அவனைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அவனுடைய அஜாக்கிரதை சுபாவத்தைப் பற்றியும் விசாரப்பட வேண்டியதில்லை!" என்றார்.

பிறகு, வந்தியத்தேவனைப் பார்த்து, "தம்பி! பொன் மாளிகை கட்டியது உசிதமானாலும் உசிதமில்லாவிட்டாலும் நான் காஞ்சிக்கு வருவது சாத்தியமில்லை. நீதான் பார்க்கிறாயே! எப்போதும் படுத்த படுக்கையாக இருந்து வருகிறேன். நெடுந்தூரப் பிரயாணத்தை மேற்கொள்ளுதல் இயலாத காரியம். ஆதித்தன்தான் என்னைப் பார்ப்பதற்கு இங்கே வந்தாக வேண்டும். அவனைக் காண்பதற்கு எங்களுக்கும் ஆசையாகத்தான் இருக்கிறது. நாளைக்கு மீண்டும் வா! மறு ஓலை எழுதி வைக்கும்படி சொல்லுகிறேன்!" என்றார்.

இச்சமயத்தில், கூட்டமாகப் பலர் தரிசன மண்டபத்தை நெருங்கி வருவதை வந்தியத்தேவன் அறிந்தான். ஆகா! அந்தப் புலவர் கூட்டம் வருகிறது போலும்! அவர்களுடன் ஒருவேளை சின்னப் பழுவேட்டரையரும் வருவார். அப்புறம் தான் சொல்ல வேண்டியதைச் சொல்ல முடியாமலே போய் விடலாம்! நாலு வார்த்தையில்

சுருக்கமாக இப்போதே சொல்லி விட வேண்டியதுதான்!—இவ்விதம் சில விநாடிப் பொழுதில் சிந்தித்து முடிவு செய்து, "சக்கரவர்த்தி! தயவு செய்யுங்கள்! கருணை கூர்ந்து என் விண்ணப்பத்தைக் கேளுங்கள். தாங்கள் அவசியம் இந்தத் தஞ்சையிலிருந்து கிளம்பி விட வேண்டும். இங்கே தங்களை அபாயம் சூழ்ந்திருக்கிறது! அபாயம்! அபாயம்!..." என்றான்.

அவன் இவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சின்னப் பழுவேட்டரையர் தரிசன மண்டபத்துக்குள் பிரவேசித்தார். அவரைத் தொடர்ந்து புலவர்கள் வந்தார்கள்.

வந்தியத் தேவன் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் கோட்டைத் தளபதியின் காதில் விழுந்தன. அவருடைய முகத்தில் கோபக் கனல் ஜுவாலை விட்டது! (தொடரும்.)

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 21. சந்தேக விளக்கம்

இக் கட்டுரைகளைப் படிக்கும் அன்பர்களிடமிருந்து பல சந்தேகங்களைக் கேட்டும், நோய்களுக்குப் பரிகாரம் கேட்டும், தினசரி அநேக கடிதங்கள் வந்த வண்ணமிருக்கின்றன. இவர்கள் ஒவ்வொருவருக்கும் பதில் எழுதுவது சாத்தியமல்ல. எழுதுபவர்கள் எழுதட்டும். ஆனால் இனி கட்டுரைகளின் மூலமாகவே சந்தேகத்துக்குப் பதிலும் நோய்களுக்குப் பரிகாரமும் வெளிவரும். தயவு செய்து விடாமல் கட்டுரைகளைப் படித்து வந்தால் நல்லது.

சிலர் இனி வரும் கட்டுரைகளில் சொல்லப் போகும் ஆசனங்களைப் பற்றி இப்பொழுதே கேட்கின்றனர். அவர்களெல்லோரும் தயவு செய்து பொறுமையாகப் படித்துவரக் கோருகிறேன்.

சிலர் துவக்கதிலிருந்து சரிவரத் தொடர்ந்து படிக்காததினால், ஏற்கனவே எழுதின விஷயங்களைப் பற்றியும் கேட்கின்றனர். அவர்களே அதைத் தேடி வாங்கிப் படித்துக் கொள்ள வேண்டியதுதான்.

கேள்வி:—யோகாசனங்களைச் சில நாட்கள் செய்து, பின் விட்டு விட்டால் பல நோய்கள் வரும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அது உண்மையானால், நோய் வாராமல் தப்புவதற்கு எவ்வளவு காலம் செய்ய வேண்டும்?

ஆரோக்கியமுடையோன் — சிலோன்.

பதில்:—ஆகாரமும், நித்திரையும் எப்படி ஒரு மனிதன் கட்டாயம் செய்ய வேண்டுமோ, அதைப் போல தேகப் பயிற்சியும் கட்டாயம் செய்ய வேண்டும். சில நாட்கள் மட்டும் செய்து விட்டால் நிதி சேர்த்து விடுவதைப் போல் ஆரோக்யத்தைச் சேர்த்து விடலாம். பிறகு அதிலிருந்து சும்மா உட்கார்ந்து கொண்டு செலவு செய்யலாம் என்பது கிடையாது. செலவழிக்கச் செலவழிக்கக் குறைடத்தானே செய்யும்! ஆசனங்கள் பழகி விட்டுப் பிறகு செய்யாமல் விட்டுவிட்டால், நோய்கள் வந்து விடும் என்பது ஆசனங்களின் மேல் போடும் வீண் பழி ஆகும். ஆசனம் செய்து நோய் வருவது என்பது இடையிலே கிடையாது. அவரவர்களின், ஆகாரக் கோளாறினாலும் கடத்தைப் பிசகினாலும் நோய்வந்தால் யார் என்ன செய்ய முடியும்? எப்படியும் கடப்பேன்; ஆனால் நோய் வரக்கூடாது. ஆசனமே எல்லாவற்றையும் தடுத்துவிட வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது.

கேள்வி:—யோகாசனங்கள் மூலமாக யூஜென் சாண்டோவைப் போல் பெரிய மனிதனாகவும், மிகப் பலசாலியாகவும் வரலாமா? வரமுடியுமானால் அதற்குத் தேவையான சில ஆசனங்களை எடுத்துக் கூறுங்கள்.

ஆரோக்கியமுடையோன் — சிலோன்.

பதில்:—ஆசனம் பழகுவதனால் யூஜென் சாண்டோவைப் போல் பெரிய மனிதனாகவும், மிகப் பலசாலியாகவும் ஆக முடியாது. ஆனால் அந்த சாண்டோவை விட ஆரோக்கியமாக வாழ முடியும்.

உயர்ந்து பெரிய ஆளாய் வளர்வது எல்லாம், வம்ச பரம்பரையைப் பொறுத்திருக்கிறது. ஆனால் ஆசனங்களினால் சற்று உயரமாகலாம். நாலரை அடியே வளரக் கூடியவர்கள் சிறு வயதிலிருந்தே செய்தால் நாலே முக்கால் அல்லது ஐந்து அடி வளரலாம். ஆறு அடியாக வளர முடியாது.

பலம் அவசியமா? ஆரோக்கியம் அவசியமா என்று பார்த்தால், இரண்டும் அவசியந்தான். அவை யோகாசனங்கள் பழகுவதில் கிட்டும். ஆனால் சாண்டோக்களைப் போல் மற்றவர்கள் பிரமிக்கும்படி யானையைத் தூக்கவும், அந்தர் கணக்கில் பாரங்களைத் தூக்கவும், 'சங்கிலியை அறுக்கவும் முடியாது. அவை எல்லோ

ரும் செய்ய வேண்டுமென்ற அவசியமும் கிடையாது. அதற்கென்று தனியாக வெகு புஷ்டியான ஆகாரங்களைச் சாப்பிட வேண்டும். பால், பாதாம் மற்றும் புஷ்டி தரக்கூடிய ஆகாரங்களை அபரிமிதமாய்ச் சாப்பிட வேண்டும். அவர்கள் செய்யும் பயிற்சிகளுக்கு அவைகள் வேண்டியதே. ஆனால் எல்லோராலும் அப்படிச் செய்ய முடியுமா? ஏழைகளால் அந்த ஆகாரங்களைச் சாப்பிட முடியுமா? சிலரால் தான் முடியும். அதுவும் வாலிபர்கள் செய்யலாம். மற்ற வயதினர்களால் செய்ய முடியாது. பெண்களுக்கு இவைகளைச் செய்யச் சொல்லி, யாராவது சிபாரிசு செய்வார்கள் என்று நம்ப முடியவில்லை. எங்கோ ஓரிரு பெண்கள் துணிந்து செய்யலாம்.

அப்படியும் அந்தப் பயிற்சிகளைச் செய்பவர்களுக்கு, நோய்கள் தடுக்கும் குணம் இருக்கிறதா என்றால், கிடையாது.

உதாரணமாகக் காலஞ்சென்ற ஸ்ரீ ராமமூர்த்தி சாண்டோவை எடுத்துக் கொள்வோம். அவர் நமது நாட்டுக்கே பெருமை அளித்தவர். அவரைப் போன்ற உடல் கட்டு யாருக்கும் கிடையாது. இன்றெல்லாம் அவர் உடல் அழகைப் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலத் தோன்றும். உடல் அழகு, சதைக் கட்டுகள் என்றால் இப்படியல்லவா இருக்கவேண்டும் என்று எண்ணுவோம். இரண்டு மோட்டார்களை, இரண்டு பக்கமும் ஸ்டார்ட் செய்து விட்டு விட்டால் அவைகளை நகராமல் அப்படியே இரண்டு கைகளால் பிடித்துக் கொள்வார். ஒரு அங்குலமும் நகராது. அவ்வளவு பலம் கொண்டவர். ஆனால் அவர் அகாலத்தில், அதுவும் 'டயாபெடிஸ்'ல் இறந்து விட்டார் என்றால் ஆச்சரியமாக இல்லையா? தெருவில் நடக்கும் போது ஒரு ஆணி காலில் பொத்துக் கொண்டது. சிறு நீரில் சர்க்கரை இருந்ததால் அக்காயம் ஆறவில்லை. அந்த வியாதியினாலேயே அவருடைய 52-வது வயதில் காலமாகி விட்டார்.

இவருக்குச் சிறு நீரில் சர்க்கரை எப்படி வந்தது? அவ்வளவு பலசாலிக்கு, சர்க்கரையை ஜீரணிக்கும் சக்தியில்லாமல் போய்விடுமா? என்றால், ஆம்; அவர்கள் செய்யும் பயிற்சி, சாப்பிடும் உணவு, நடவடிக்கை முதலியவைகளில் அம்மாதிரி உண்டாய் விடுகிறது. அப்பயிற்சிகள் வெளிப்பார்வைக்கு அழகாய்த் தோன்றும்படி சதைக்கட்டுகளை எழுப்பிவிடுகிறது. வியாதியை எதிர்க்கும் சக்தி கிடையாது. ஒரு நாள் மலேரியா ஜுரத்திற்கு, இவர்களின் பலம், சதைக்கட்டு ஈடு கொடுக்காது. சதைகள், நரம்புகள் தளர்ந்துவிடும். பிறகு அவர்களைப் பலப் பரீட்சைக்கு ஆஜராகச் சொல்லுங்கள் பார்க்கலாம்! குறைந்தது இழந்த பலத்தைப் பெறவே அவர்களுக்கு ஆறு மாதமாகும்.

காரணம், அவர்களின் பயிற்சிகளில், அபூர்வரஸ கோளங்களுக்குப் பயிற்சியில்லாமைதான்.

உலகத்தையே வென்று விட வேண்டும் என்று கிளம்பின மகா அலெக்ஸாண்டரின் கதி என்ன ஆயிற்று? மலேரியா ஜுரத்தில், தனது 30-வது வயதில் மாண்டார். அநேக யுத்த களங்களில் வென்று, ஜெயக் கொடியை நாட்டிய வீரனுக்கு, கொசுக் கடிக்குத் தாக்குக் கொடுக்கும் சக்தி உடலில் இல்லாமல் போய்விட்டது. மகா அலெக்ஸாண்டரை வெல்லப் பெரிய ராஜ்யங்களால்கூட முடியவில்லை. ஆனால் கொசுக்கள் வென்று விட்டன. மலேரியாக் கிருமிகள் அவருடைய ரத்தக் கிருமிகளைக் கொன்று, அழித்து வெற்றிக் கொண்டன.

எவ்வளவு பலம் இருந்தும் யாது பயன்? வியாதிகளை எதிர்த்துத் தாக்கக் கூடிய சக்தி இருக்க வேண்டும். அதுவும் எந்த வயதிலும் இருக்க வேண்டும். அது பூரணமாய் யோக ஆசனங்களில் தான் அமைந்திருக்கிறது. அபூர்வரஸக் கோளங்களை ஆசனங்களின் மூலமாய்த்தான் ஆள முடியும். அக்கோளங்களின் ஹார்மோன்களால் தான் வியாதியெனும் விரோதியை வெற்றி கொள்ள முடியும்.

அப்படியானால் அந்தப் பயிற்சிகள் எல்லாம் வேண்டாம் என்று பிரசாரம் செய்கிறீரே என்று யோசிக்கிறீர்கள் அல்லவா? நாட்டுக்கு மதிப்பை உண்டாக்கும் சாண்டோக்கள் வேண்டாமா? தேசத்தைக் காத்த வீரர்கள் வேண்டாமா? பலசாலிகள் வேண்டாமா என்று கேட்கிறீர்கள் அல்லவா?

அவசியம் வேண்டும். செய்பவர்களை அதை விட்டு விட்டு இதைச் செய்ய சொல்லவில்லை. அவைகளுடன் ஆசனங்களையும் பழகினால் தான் நலமது. ஆனால் இரண்டையும் சேர்த்து ஒரே காலத்தில் செய்யக்கூடாது. ஒரு பயிற்சியைக் காலையில் செய்தால் மாலையில் மற்றொரு பயிற்சியைச் செய்யலாம்.

மற்ற பயிற்சிகள் செய்பவர்கள், ஆசனத்தையும் பழகினால், மற்ற பயிற்சிகளினால் உண்டாகும் சில வேண்டாத குணங்கள் உண்டாகா. புகைபிடித்தல், குடித்தல் முதலானவைகளைச் செய்யத் தூண்டாது. இந்திரியங்களைக் கட்டுப்படுத்தும் சக்தி ஏற்படும். மொத்தத்தில் மனிதன் மனிதனாக வாழலாம். அதற்கு யோக ஆசனத்தையும் கைக் கொண்டால் தான் முடியும்.

(தொடரும்)

# இலங்கையின் கௌரவப் பிரஜை

ரஜனி

கொழும்பு, ஜனவரி 4ட.

வருடந்தோறும் 25 அயல் நாட்டவர்களை இலங்கையின் கௌரவப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளும் அதிகாரம் பிரஜா உரிமைச் சட்டத்தின் கீழ் பிரதம மந்திரிக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இலங்கைக்கு விசேஷமான சேவை புரிந்தவர்கள், தொழில், வர்த்தக, விஞ்ஞான, கலாசாரத் துறைகளில் சிறப்புற்று விளங்குபவர்கள், சமூக நலனுக்காகப் பாடுபட்டவர்கள் முதலியோர் இலங்கைப் பிரஜைகளாவதற்குப் போதிய யோக்கிய தாம்சங்கள் இல்லாதவர்களாயிருப்பினும் அவர்களுடைய சேவைகள் இந்நாட்டுக்கு நிரந்தரமாகக் கிடைக்கச் செய்யவும், அவர்களைக் கௌரவிக்கவுமே பிரஜா உரிமைச் சட்டத்தில் ஒரு ஷரத்து விசேஷமாகச் சேர்க்கப்பட்டது.

கௌரவப் பிரஜா வுரிமை சேவையை மாத்திரம் மதித்து வழங்கப்படுவதில்லையென்றும் சர்க்காரை ஆதரிப்பவர்கள், ஆதரிக்கக் கூடியவர்கள், சர்க்கார் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சிக்குப் பெருந் தொகையாக நன்கொடை வழங்குபவர்கள் முதலியோர்களுக்கு மட்டுமே கௌரவப் பிரஜா வுரிமை கிடைக்கக் கூடுமென்றும் பலமான வதந்திகள் உலவுகின்றன. இந்த வதந்திகளில் ஓரளவு உண்மையில்லாமலுமில்லை. இதற்கு விதிவிலக்காக இவ்வருடம் அன்பர் பூபதி தாஸர் இலங்கையின் கௌரவப் பிரஜையாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறார்.



அன்பர் ஸ்ரீ பூபதி தாஸர்

அன்பர் பூபதிதாஸர் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்த நாகூரில் பிறந்தவர். 1930-ம் வருஷம் முதல் இலங்கையைத் தாயகமாகக் கொண்டு இங்கு வசித்து வருகிறார். பிறவியில் அவர் ஒரு முஸ்லிம். ஆயினும் சர்வ மத உண்மைத் தத்துவங்களையும் ஆராய்ந்தறிந்து தமது சக்திக்குத் தகுந்த மட்டில் போதிப்பதையே வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டவர். அவர் செய்து வரும் ஒரு முக்கியமான பணி அனாதை ஆச்ரமம் ஒன்று நடத்துவதுதான். ஜாதிமத பேதமில்லாமல் எல்லா வகுப்புகளையும் சேர்ந்த அனாதைக் குழந்தைகளுக்கு உடையும் உணவும் கொடுத்துக் கல்வி கற்பிக்கப்படுகின்றது அவருடைய ஆச்ரமத்தில். அன்புமார்க்கச் சங்கம் என்ற பெயருடன் அன்பர் பூபதி தாஸர் நடத்தி வரும் ஸ்தாபனம் வகுப்பு ஒற்றுமையையும் அன்பு, அஹிம்சை, சத்தியம் முதலான காந்தீயக் கொள்கைகளையும் உபதேசித்து வருகின்றது. சர்வமத அடிப்படையில் அவர் செய்யும் சேவைகளைப் பாராட்ட பிரதமர் சேனநாயக அன்பர் பூபதிதாஸரை இலங்கைப் பிரஜையாகப் பதிவு செய்து கொண்டதின் மூலம் சர்க்கார் மீது கூறப்பட்டு வரும் புகார்களுக்குச் சிறிதளவு பரிகாரம் தேடிக் கொண்டிருக்கிறார். கௌரவப் பிரஜா உரிமை பெறும் முதலாவது தென்னிந்தியத் தமிழர் இவர்தான்.

## காங்கிரஸின் பலத்த ஆட்சேபனை

ராஜாங்க மந்திரி குணசிங்காவுடன் இலங்கை இந்திய வர்த்தகச் சங்கமும் இலங்கை தோட்ட முதலாளிமார் சம்மேளனம், தோட்டச் சிப்பந்திமார் யூனியன் ஆகியவைகளும் செய்து கொண்டுள்ள இலங்கையர் மயமாக்கும் ஒப்பந்தத்தைப் பற்றிக் கடுமையாகக் கண்டித்து இலங்கை இந்திய காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஸ்ரீ வி. கே. வெள்ளையன் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அந்த அறிக்கையில் பிரஸ்தாப ஒப்பந்தங்கள் ஒரு தலைப் பட்சமானதும் நேர்மையற்றது மென்பதோடு ஆபத்தான தென்பதையும் அவர் சுட்டிக் காட்டியிருக்கிறார். இலங்கையர் மயமாக்கும் திட்டத்தைக் காங்கிரஸ் எப்பொழுதும் ஆட்சேபிக்கவே யில்லை. ஆனால்



மாமியார் :—ராமு கூப்பிடுகிறானே, என் என்று கேட்டுவிட்டு வாயேன்!

மருமகள்:—அவாளுக்கு என்ன வேலை! அடிக்கொருதரம் கூப்பிடுகிறார்!

மாமியார் :—இப்படித்தான் புருஷன் கூப்பிடுவதற்குப் பதில் சொல்லுவதா?

மாமனார் (மனைவியைப் பார்த்து):—இந்தா மங்களம்! இங்கு வா, ஒரு சமாசாரம் கேட்கணும்?

மாமியார் :—உங்களுக்கு வேறு வேலை என்ன? ஒன்று மில்லாத காரியத்துக்கெல்லாம் கூப்பிடுகிறேளே!

ற்கெனவே இலங்கையில் வசித்து வரும் இந்தியர்களை நாட்டிலிருந்து விரட்டக் கூடிய முறையில் எவ்வித திட்டமும் அமுலுக்குக் கொண்டுவரக் கூடாதென்று தான் காங்கிரஸ் கேட்கிறது. 1948-ம் வருஷ ஜூலை மாதத்துக்குப் பிறகு வேலைகளில் அமர்த்தப்பட்ட இந்தியர்கள் இந்திய வர்த்தகச் சங்கம் சம்மதித்த ஒப்பந்தத்தின் பிரகாரம் இப்பொழுது வேலை நீக்கம் செய்யப்பட்டு வருகிறார்கள். இவர்கள் நாடு கடத்தப்படவும் கூடும். இனி இந்தியர்களைப் புதிதாக எந்த வேலையிலும் நியமிக்கப்படா தென்பது ஒப்பந்தத்தின் முக்கியமான ஷரத்துகளில் ஒன்று. இதன்படி சென்ற பல ஆண்டுகளாக கடைச் சிப்பந்திகளாகவும் தோட்டச் சிப்பந்திகளாகவும் இங்கு வேலைக் கிருந்து வரும் இந்தியர்களுடைய பிள்ளைகளுக்கு இலங்கையில் இனி எங்கும் வேலை கிடைப்பதிற்கில்லை. வேலைபற்றவர்களுக்குப் பிரஜாவுரிமை கிடையாதாகையினால் இவர்கள் தங்களை இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளுவதற்கும் புதிய பெரிய முட்டுக்கட்டை போடப்படுகிறது.

அகில இலங்கை ஷாப்புச் சிப்பந்திகள் யூனியனும் இது பற்றித் தனது பலத்த ஆட்சேபணையைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறது. ஷாப்புச் சிப்பந்திகளின் பொறுப்பு வாய்ந்த யூனியனையும் கலந்து கொள்ளாமல் இந்தியா பாகிஸ்தானியர் வர்த்தகச் சங்கங்கள் ராஜாங்க மந்திரியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது அக்கிரமமானது. இந்த ஒப்பந்தத்திலிருந்து உடனே தங்களை விடுவித்துக் கொள்ள வேண்டுமென்றும் யூனியன் கோரியிருக்கிறது.

## இரண்டு லட்சம் நிதி

இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் பிரஜாவுரிமை நிதிக்கு இரண்டு லட்சம் ரூபாய் திரட்ட ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். சுமார் இரண்டு லட்சம் தோட்டத் தொழிலாளர்களை இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்ய வேண்டியுள்ளதென்றும் கல்வி வாசனையில்லாத இவர்கள் ஒவ்வொருவருக்கும் மனுக்களைப் பூர்த்தி செய்து அவசியமான தஸ்தாவேஜுக்களைத் தயாரித்துக் கொடுக்கப் பெரும் பணச்செலவில் ஏராளமான உத்தியோகஸ்தர்களை நியமிக்கவேண்டியுள்ளதென்றும் இந்திய வர்த்தகச் சங்கம் போன்ற ஸ்தாபனங்கள் பணவுதவி செய்வதாகக் கூறியது இன்னும் பேச்சளவிலேயே இருப்பதால் தான் பொது ஜனங்களிடமிருந்து நிதி திரட்டவேண்டிய அவசியமேற்பட்டுள்ளதென்றும் ஸ்ரீ ராஜலிங்கம் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## தமிழும் சிங்களமும்

யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபைத் தலைவர் ஸ்ரீ ஆர். வெகுருநாதர் தமது ஸ்தாபனம் நிறைவேற்றியுள்ள இரண்டு தீர்மானங்களை சர்க்காருக்கும் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கும் அனுப்பி வைத்திருக்கிறார். தமிழும் சிங்களமும் சம அந்தஸ்துடன் இலங்கை முழுவதிலும் சர்க்கார் பாஷைகளாக்கப்பட வேண்டுமென்பது முதலாவது தீர்மானம். எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இவ்விரு பாஷைகளும் கட்டாயப் பாடங்களாகப் போதிக்கப்பட வேண்டுமென்பது இரண்டாவது தீர்மானம். சிங்களத்தை ராஜாங்க பாஷையாகவும் பௌத்த மதத்தை ராஜாங்க மதமாகவும் செய்ய வேண்டுமென்ற கிளர்ச்சி சிங்களவர்களிடையில் பலமடைந்து வருகையில், தமிழ் மொழியின் அந்தஸ்தையும் பழமையையும் சிறப்பையும் வற்புறுத்தும் வண்ணம் யாழ்ப்பாணத்திலே தமிழ் விழா நடைபெற விருப்பது விசேஷமாக வரவேற்கப் படுகின்றது. அடுத்த வாரத்தில் திருகோணமலையிலும் அதன் பிறகு கொழும்பிலும் தமிழ் விழாவுக்கு ஆதரவு தேடப் பொதுக் கூட்டங்கள் நடத்தப் போவதாக தமிழ் விழாக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எஸ். நடேசன் அறிவித்துள்ளார்.

# ஆற்றங்கரையிலே...

ரா. வி.

மாசி மாதத்துக் குளிர் 'வெடவெட' என்று நடுக்கிக் கொண்டிருந்தது. நாற்புறங்களிலும் ஒரே மையிருட்டுக் கவிழ்ந்திருந்தது. நன்றாகப் பனி வேறு பெய்து கொண்டிருந்தது. குளிர் தாங்கமாட்டாமல் வானம் கூடத் தன் பனிப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு கண்ணயர்ந்திருந்தது. காவேரி யாற்றின் அக்கரையிலே வெண்முகில்கள் ஒரு சின்னஞ் சிறு நகரத்தையே சிருஷ்டிப்பது போலக் காட்சியளித்துக் கொண்டிருந்தன. சந்திரனும் நிசாதேவியின் அன்பார்ந்த மடியில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு, தூங்கி வழிந்து கொண்டிருந்தான்.

அதே காவேரி நதிக்கரையில் ஒரு ஆல மரத்தடியில், எண்ணற்ற ஏழைப் பிச்சைக்காரர்கள் குளிர் தாங்க மாட்டாமல், சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருந்தனர். அப்பப்பா! அவர்களில் தான் எத்தனை விதமான அதிசயப் பிறவிகள்! அந்தக் கும்பலில், கணக்கற்ற நொண்டிகளும், முடவர்களும் கண்ணற்ற கபோதிகளும் இருந்தனர். அங்கஹீனர்களில் தான் எத்தனை விதம்! படைத்த பிரமன் தன்னுடைய காருண்யத்தை அத்துடன் நிறுத்திக் கொண்டிருந்தாலாவது பாதகமில்லையே! அவன் வித விதமான நோய்களையும் அல்லவா அவர்களுக்குப் பிறப்புரிமையாக வழங்கியிருந்தான்! 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பார்கள்! ஆனால் அந்தக் கும்பலில் உள்ள பெரும்பாலானவர்கள் நோய் சம்பந்தப்பட்ட பட்டியல் பெரும் பணக்காரர்களாக, வற்றாத களஞ்சியங்களாக இருந்தனர். களஞ்சியங்கள் என்று கூறுவது கூடப் பொருந்தாது. வற்றாத ஊற்றுக்கள் என்றுதான் சொல்ல வேண்டும்! ஒருவன் உடுக்கவும் துணியின்றிக் குளிரில் வாடி மடிந்து கொண்டிருந்தான். இன்னொருவனுக்கு இழுப்பு வியாதி! மற்றொருவனுக்கு எலும்பு உருக்கி! பலருக்குக் குளிர் ஜுரம்! இதற்கெல்லாம் மேலாக எல்லாரையுமே பசிப்பிணி வாட்டிக் கொண்டிருந்தது. ஆகவே அந்தக் கும்பலில் எங்கே பார்த்தாலும், 'ஐயோ, அப்பா!' என்ற அவலச் சொற்களும், 'செத்தேன், இனிப் பிழைக்க மாட்டேன்!' என்ற அலறல்களும் தான் வந்து கொண்டிருந்தன.



ஒரு தடவை அந்தப் பக்கம் போய்ப் பார்த்தால், சித்தார்த்தர் எண்ணியது போல, 'சர்வம் துக்க மயம் ஜகத்!' என்று தான் எண்ணத் தோன்றும். படைப்புத் தொழிலை ஏற்றுக் கொண்டிருக்கும் அந்தப் பிரம்மனுக்கு இம்மாதிரிச் சிருஷ்டிகளைச் சிருஷ்டித்து இந்த உலகத்தை நிரப்புவதில் என்னதான் ஆனந்தமோ, புரியவில்லை! அவன் அத்துடன் நிறுத்திக் கொண்டிருந்தாலாவது பாதகமில்லையே! அதே காவேரி யாற்றங்கரையில், கூப்பிடு தூரத்தில், வானமளாவ ஓங்கி நிற்கும் மாட மாளிகைகளையும், சதா காலமும் சுகம் அனுபவிக்கும் கும்பல்களையும் வேறு அல்லவா அவன் படைத்திருந்தான்! அந்த மாட மாளிகைகளில் வாழ்ந்து கொண்டிருந்த மக்கள் எவ்விதக் கவலையும் இன்றி ஆனந்தமாகக் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தனர். ஒரு இடத்திலிருந்து வீணையின் இனிய நாதம் எழுந்து கொண்டிருந்தது. இன்னொரு இடத்திலிருந்து, ஹார்மோனியம் 'ச-ரி-க-ம' என்று ஸ்வரம் பாடிக் கொண்டிருந்தது. வேறு ஒரு இடத்திலிருந்து பிடிலின் நாதம் வந்து கொண்டிருந்தது. அது மட்டும் அல்ல; உள்ளங் கவர் கள்வன்,

மாயக் கண்ணனுக்கு மிகவும் பிடித்த வாத்தியம் மோகன முரளி யல்லவா! அதன் ஒலியும் எங்கிருந்தோ காற்றில் கலந்து வந்து கொண்டிருந்தது. அந்த இன்னிசைகள் எல்லாம் கேட்போரை ஆனந்த பரவசப்படுத்திக் கொண்டிருந்தன. அந்த இன்னிசையிலும் நடுநடுவே சோகக் குரலும் கலந்திருந்தது என்பதை ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும்; காரம் இருந்தால் தானே தித்திப்பு எடுத்துக் காட்டும்! அதுபோல அந்தச் சோகம், சுகத்தை இன்னும் உச்சஸ்தாயியில் கொண்டு போய் விட்டிருந்தது என்று தான் சொல்ல வேண்டும்.

அந்த ஆலமரத்தடியிலே, ஒரு கிழவி ஒரு சின்னஞ்சிறு பெண்ணுடன் இளைப்பாறிக் கொண்டிருந்தாள். அவளுடைய கந்தல் துணிதான் அவளுக்குக் கீழ் விரிப்பாகவும், போர்வையாகவும் திகழ்ந்தது. கிழவி குருடி; அந்தச் சின்னஞ்சிறு பெண்ணிடம் அவளுக்கு அளவிலாப் பற்றுதல். அந்தச் சின்னஞ்சிறு பெண்தானே, அவளுடைய வாழ்வுக்கு ஆதாரமாகவும் ஊன்று கோலாகவும் இருந்தாள்!

பெண் தூங்காமல் உட்கார்ந்திருந்தாள். அந்த உடல் உதறும் குளிரில் எப்படித் தூக்கம் வரும்? கிழவி தழுதழுத்த குரலில், "பொன்னி! இன்று உனக்குத் தூக்கம் வரவில்லையா? ரொம்பக் குளிருகிறதோ? வா, என் பக்கத்தில் வந்து படுத்துக் கொள்ளு; என்னைக்கட்டிக்கொண்டுபடுத்துக் கொள்ளு; தூக்கம் வந்துவிடும்!" என்று அன்புடன் சொன்னாள்.

"இல்லே பாட்டி, அப்படியொன்றும் அதிகமாகக் குளிரவில்லே. ஒரு சேதி தெரியுமா, பாட்டி? இன்றைக்கு ஒரு ஐயா எனக்கு முழுசாக ஒரு அணா கொடுத்தாரு" என்றாள் சிறுமி பொன்னி.

"எப்படியம்மா!"

இன்றைக்கு யாரோ பெரிய பணக்கார ஆசாமி காவேரிக்கு முழுக வந்தாங்க; அவங்க பின்னோடு ஒரு அம்மாவும் வந்தாங்க. அந்த அம்மா உடம்பு முழுவதும் கல் இழைத்த நகைகளாகவே போட்டுக் கொண்டிருந்தாங்க. அவங்க பின்னோடேயே வந்த ஒரு ஐயா தலைக்கு ஓரணாக் கொடுத்தாரு. எனக்கும் ஓரணா கிடைத்தது.—ஆமாம், ஒன்று கேட்கிறேன், சொல்லுவாயா, பாட்டி?" என்று ஆச்சரியம் ததும்பிய குரலில் கேட்டாள் சிறுமி.



"என்ன, அம்மா? கேள், தெரிந்தால் சொல்லுகிறேன்!"

"அந்த அம்மாளுக்கு இவ்வளவு நகைகள் எப்படிக் கிடைத்திருக்கும், பாட்டி?"

"கடவுள் கொடுத்திருக்கிறார், அம்மா!"

"அந்தக் கடவுள் நமக்கு ஏன், பாட்டி, கொடுக்கவில்லே?"

"அவர் நம்மைப்போல உள்ள ஏழைகளுக் கெல்லாம் கொடுக்க மாட்டார், அம்மா!"

"ஏன், பாட்டி?"

"அப்புறம் இந்த உலகம் முழுவதுமே பணக்கார உலகமாகப் போய்விடும் இந்த உலகத்தில் ஏழைகளே இல்லாமல் போய் விடுவார்கள். தயவு-தாட்சண்யம், ஈவு இரக்கம் முதலிய புண்ணிய காரியங்களே இல்லாமல் போய்விடும். அதனால்தான் அவர் கொடுக்கமாட்டேன் என்கிறார்" என்றாள் கிழவி.

பொன்னிக்குக் கிழவி சொன்னது ஒன்றும் புரியவில்லே. தயவாவது, தாட்சண்யமாவது? ஈவாவது. இரக்கமாவது? புண்ணிய காரியம் என்றால் என்ன? பாட்டி சொல்லுவது புரியவேயில்லையே! பாட்டி சொல்லுவது பாட்டிக்குத்தான் புரியும் போலிருக்கிறது! பாட்டி ஏதாவது உளறிவிட்டுப்போகட்டும், அதைப் பற்றி நமக்கென்ன? அந்த அம்மாள் கையிலிருந்த காப்பு எப்படிப் 'பளபள' வென்று மின்னிக் கொண்டிருந்தது!' என்ற சிந்தனையில் பொன்னி தன் மனத்தைச் செலவிட்டாள்.

கிழவி பொன்னியின் சிந்தனையைக்

கலைத்து, "அம்மா பொன்னி, ரொம்ப நேரம் ஆவுது, பார்! பேசாமல் தூங்கு அம்மா! இது மாசி மாதம் அல்லவா? ஜனங்கள் காவேரியில் முழுகுவதற்கு வருவார்கள். விடியற் கருக்கலில் நாம் எழுந்து போகவேண்டும். அதனால்தான் சொல்லுகிறேன்!" என்று வெகு பரிவுடன் தூங்குமாறு சொன்னாள்.

★

பொன்னி ஆறு வயதுக் குழந்தையாக இருந்தபொழுதே, அவளுடைய தாயார் கோலாகலம் நிறைந்த இந்த உலகத்தை வெறுத்துக் கண்களை மூடி விட்டாள். கிழவிதான் வெகு கஷ்டப்பட்டு அவளை வளர்த்துப் பெரியவளாக்கினாள். அவள் பிச்சை வாங்கப் போகும் பொழுதெல்லாம் பொன்னியும் பின்னோடு போவாள். பொன்னிதானே குருட்டுக் கிழவிக்கு வழிகாட்டியாகவும் ஊன்றுகோலாகவும் இருந்தாள்! அவள் இருந்தது கிழவிக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்தது. பக்கத்தில் அவள் இருந்தால்தான் கிழவிக்கு, 'நாமும் இந்த உலகத்தில்தான் இருக்கிறோம்' என்ற உணர்ச்சி ஏற்படும்; மனதுக்கு மகிழ்ச்சி ஏற்படும்.

காலதேவன் தன் குதிரைகளைக் கன வேகமாகச் செலுத்தலானான். நாட்கள் மாதங்கள் ஆயின, மாதங்கள் வருஷங்கள் ஆயின. வருஷங்களும் ஒவ்வொன்றாக உருண்டு ஓடலாயின. அதற்கேற்றவாறு, பொன்னியும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளரலானாள்.

கிழவியின் சரீரம் வரவரத் தளர்ந்து விட்டது. இப்பொழுதெல்லாம் அவளால் பிச்சை வாங்கக்கூட வெளியே போக முடிவதில்லை. அவளுக்கு நடமாடத் தெம்பிருந்தால்தானே, பிச்சை வாங்கப் போவதற்கு? ஆகவே, பொன்னி வாங்கி வருவதைக் கொண்டுதான், அந்த இரு ஜீவன்களுடைய வாழ்க்கையும் ஓடி வந்தது. பொன்னி உட்கார்ந்திருக்கும் வேளைகளில், தான் போய் வந்த கதைகளை ஒன்று விடாமல் கிழவிக்கு உரைப்பாள். அவளுக்குக் கிழவியிடம்தான் என்ன பற்றுதல்! என்ன பிரேமை! சின்னஞ் சிறு பாலகனுக்குத் தன் விளையாட்டுப் பொருள்களிடம் இருக்கும் பிரியத்தைக் காட்டிலும், அவளுக்கு அந்தக் கிழவியிடம் பன்மடங்கு அதிகப்பிரியம் இருந்தது.



★

காலப்புரவி வெகு வேகமாக ஓடியது. பொன்னி இப்பொழுது சிறுமியில்லை. 'பெரியவள்' ஆகிவிட்டாள். அவளுடைய உடலை யௌவனம் அலங்கரிக்கத் தொடங்கிற்று.

அவளுடைய உடலில் யௌவனம் அதிகரிக்க அதிகரிக்கக் கிழவியைக் கவலை சூழ்ந்து கொண்டது. 'எவ்வளவு நாட்கள்தான் இந்தப் பிச்சைப் பிழைப்புப் பிழைப்பது? பொன்னிக்கு எப்படியாவது ஒரு புருசனைப் பார்த்துக் கண்ணாலம் கட்டிக் கொடுத்தாக வேண்டுமே!' என்றெண்ணி அவள் மனம் பொருமினாள்.

ஏழையாயிருந்தால் என்ன, பணக்காரனாயிருந்தால் என்ன? யாருக்குமே பெண்ணுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் ஆகிச் சுகமாக வாழவேண்டும் என்ற ஆசை எழுவது சகஜம்தானே! ஆகவே, கிழவிக்கு அப்பாதிரி ஆசை எழுந்ததில் வியப்பென்ன இருக்கிறது?

ஏற்கெனவே கிழவியின் சரீரம் தளர்ந்து சோர்ந்து போயிருந்தது. அவளால் எழுந்து பிச்சைக்குப் போய் வர முடியவில்லை. பொன்னி வாங்கி வருவதைக் கொண்டு இரண்டு ஜீவன்களும் வயிற்றைக் கழுவின. அரை வயிற்றுக் கஞ்சிக்கு ஆலாய்ப் பறக்கும் நிலைமை ஏற்பட்டு விடவே, கிழவி வயிறு ஒட்டி வாய் ஒட்டி ஓடாய்ப் போய்விட்டாள். போதாக் குறைக்குப் பொன்னியின் கல்யாணக் கவலையும் சேர்ந்துகொள்ளவே, அவள் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டது. எந்த நிமிஷத்தில் ஆவி பிரியுமோ என்று நினைக்கக் கூடிய அளவில் எலும்புக்கூடு மட்டும்தான் எஞ்சியிருந்தது.

பொன்னிக்கு வயது ஆக ஆகப் பிச்சை கிடைப்பது குறைந்து வந்தது. எந்த வாசற்படியில் ஏறினாலும் 'இல்லே இங்கே இல்லே' என்ற பதில்தான் வந்தது.

ஒரு நாள் கிழவியின் சோர்ந்து தளர்ந்து போன எலும்புக் கூடு நெருப்பாகக் கொதிக்கத் தொடங்கியது. கிழட்டுச் சரீரம் எத்தனை நாட்கள்தான் பட்டினி

யையும் பசியையும் கல்யாணக் கவலையையும் தாங்கும்? அந்தக் கிழவியின் உடலிலிருந்து தீப்பொறி பறக்க ஆரம்பித்தது. அடிக்கடி அவள் முனகவும் ஆரம்பித்தாள்.

பொன்னிக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. "பாட்டி, உன் உடம்பு இப்படிக் கொதிக்கிறதே! என்ன செய்வது?" என்று வருத்தத்துடன் கேட்டாள்.

கிழவி என்ன பதில் சொல்லுவாள்? கடவுள்மேல் பாரத்தைப் போட்டாள். அதற்குமேல் அவள் செய்யக் கூடியது தான் என்ன?

"பாட்டி! உனக்குக் கஞ்சிக்காவது ஏதாவது கிடைக்குமா என்று பார்த்து வருகிறேன்" என்று சொல்லிப் பொன்னி தனியாகப் புறப்பட்டாள். தனியாகப் புறப்படாமல் என்ன செய்வது? இந்த வாழ்க்கையில் யார் யாரோடுகூட வரப் போகிறார்கள்?

அவள் பகல் முழுவதும் பிச்சைக்காகச் சுற்றாத இடம் இல்லை. ஆனால் ஒரு நம் பிடியாவது அவளுக்குக் கிடைத்தால் தானே?

அவளைப் பார்ப்பவர்கள் எல்லாரும் "சீ! இத்தனை வயதாகியும் பிச்சை வாங்க வருகிறாயே! உனக்கு வெட்கமாயில்லை? மானங்கெட்டவளே! கடவுள் கொடுத்த கைகால்கள் நன்றாயிருக்கும்பொழுது எங்கேயாவது வேலை செய்து பிழைப்பதற்கு உனக்கு என்ன கேடு?" என்று நிந்தித்தனர். சிலர் உபதேசித்தனர்; வேறு சிலர் ஏளனம் கலந்த குரலில் பரிகாசம் செய்தனர்.

கடைசியில் பொன்னி மனம் நொந்து வெறுங்கையுடன் வீடு திரும்பினாள். அந்த ஏளனச் சொற்களைக் கேட்டபின் அவளுக்குப் பிச்சைக்குக் கை நீட்டுவது என்றாலே வெட்கமாயிருந்தது.

'பொன்னி வந்து விட்டாள்' என்பதைக் காலடிச் சத்தத்தினால் அறிந்திருந்தாள் கிழவி. ஆசை வெட்கமறியாது என் பார்களே! கிழவிக்குத் தன் உயிர்மீதுள்ள பற்றுதல்தான் நீங்கவில்லையோ, அல்லது தன் பேத்தியைத் தன்னந்தனியளாக இந்தப் பாழும் உலகத்தில் விட்டு விட்டுப் போகத்தான் மனம் வரவில்லையோ, தெரியவில்லை! கிழவி மிகவும் தளர்ந்து போன குரலில், "ஏன் அம்மா, ஏதாவது கிடைத்ததா?" என்று மிகவும் பரிவுடன் கேட்டாள்.

"இல்லையே, பாட்டி! ஒன்றுமே கிடைக்கவில்லையே! 'இத்தனை வயதாகியும் பிச்சை வாங்க வருகிறாயே! உனக்கு வெட்கமாயில்லை?' என்றுதான் எல்லாரும் கேட்கிறார்கள்! 'எங்கேயாவது வேலை செய்து பிழைப்பதற்கென்ன?' என்றும் சொல்லுகிறார்கள். என்ன செய்வது பாட்டி?" என்று கேட்டாள் பொன்னி.

கிழவி கண்களை மூடியவாறே, "ஆமாம், அவர்கள் சொல்லுவது நியாயம்தானே? வேலை செய்துதான் பிழைக்க வேண்டும். நீ உன் வேலையைப் பார்! நானும் என் வேலையைக் கவனிக்கப் போகிறேன். இந்த உலகத்தையும் உன்னையும் பிரிந்து போக வேண்டிய காலம் மிகவும் நெருங்கி விட்டது. இந்த உலகத்தில் என் வேலை தீர்ந்து விட்டது. இனி இந்த உலகத்திலே எனக்கு என்ன வேலை?" என்றாள். அவளுடைய குருட்டுக் கண்களின் இரு ஓரங்களிலும் கண்ணீர் துளிர்த்து நின்றது.

"எங்கே பாட்டி, போகப் போகிறாய்?"

"இந்த உலகத்தில் வேலை செய்து எனக்கு அலுத்து விட்டது. அந்த உலகத்துக்குப் போகப் போகிறேன். அங்கும் வேலை கிடக்கிறது!" என்றாள் கிழவி.

பொன்னியின் மூளைக்குக் கிழவி சொன்ன விஷயங்கள் எட்டவேயில்லை. கிழவி சொன்ன சொற்களைப்பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க அவளுடைய மூளைதான் குழம்பிற்று.

அவள், "பாட்டி, எங்கே போகப் போகிறாய், பாட்டி?" என்று கேள்விகளைத் திருப்பித் திருப்பிக் கேட்டாள். ஆனால் கிழவி அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லும் நிலைமையில் இருந்தால் தானே? அவளுடைய வேலை தான் பூர்த்தி அடைந்து விட்டதே! இனி அவள் எதற்காகப் பொன்னியின் கேள்விக்குப் பதில் சொல்லப் போகிறாள்.

விவரமறியாத பொன்னி திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டிருந்த கேள்விகள் மட்டும் காற்றில் கலந்து வான வெளியிலே மிதந்தன.

## பரிவர்த்தனை!

"என்ன ஸார்! நீங்கள் சினிமா தியேட்டரில் வேலையாக இருப்பதாகக் கேள்விப் பட்டேன். எனக்கு இரண்டு டிக்கட் கொடுக்கக் கூடாதா, ஸார்!"

"நீங்கள் ஒரு பாங்கியில் வேலையிலிருப்பதாகக் கேள்விப் பட்டேன். எனக்கு இரண்டு நூறு ரூபாய் நோட்டுகள் கொடுக்கக் கூடாதா, ஸார்!"

# கம்பர் தரும் காட்சி

**டி. கே. சி.**

## 316. நீதான் கொன்றாய்!

அயனூரிலிருந்து இந்திரஜித்து ஊருக்கு வந்தான். ராவணனது அரண்மனையிலிருந்து என்றுமில்லாதபடி பெண்களது அழுகுரல் கேட்டது.

இரண்டாந் தடவையாக ராவணன் தோல்வியுற்றானோ என்ற சந்தேகம் இந்திரஜித்துக்கு வந்தது.

அடுத்தாற்போல் ராவணன் இறந்துதான் போய் விட்டானோ என்ற சந்தேகமும் வந்தது.

மனம் பதைத்தவனாய்த் தேரில் ஏறி நேரே போனான், ராவணனது அரண்மனைக்கு.

மிக்க துயரத்தில் ஆழ்ந்தவனாய் ராவணன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

மனசுக்குக் கொஞ்சம் ஆறுதல் உண்டாயிற்று. ராவணனைப் பார்த்து, "இப்படி யெல்லாம் துக்கத்தில் ஆழ்ந்திருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்டான்.

"உன்னுடைய தம்பிமாரை யெல்லாம் உயிர் வாங்கி விட்டான் எமன். கும்ப நிகும்பர்களும் அவர்களோடு அதிகாயனும் வானுலகத்தை அடைந்து விட்டார்கள்" என்று சொன்னான் ராவணன். இனி,

* * *

ராவணன் இப்படிச் சொன்னானோ இல்லையோ—இறந்து போனார்கள் என்ற செய்தியைத்தான்—இந்திரஜித்தின் கண்ணில் தீப்பொறி பறந்தது.

"இறந்தார்களா! அப்படியா? கொன்றதுதான் யார்?" என்று ஆத்திரத்தோடு கேட்கிறான் இந்திரஜித்து.

ஆர்கொன் றவர்
என்றலும், பேரதி
காயன்என் னும்
பேர்கொன் றவன்
தம்பிஇ லக்குவன் ;
பின்புநின் றார்
ஊர்கொன் றவ
னுற்பிற ரால்என
உற்றதெல் லாம்
தார்கொன் றையி
னன்கிரி சாய்த்தவன்
தான்உரைத் தான்.

[ஆர்கொன்றவர் என்றலும்: அப்படியும் கொல்லக் கூடியவர் யார்? சொல் என்று ஆத்திரத்தோடு இந்திரஜித்து கேட்கவும்;

பேரதிகாயன் என்னும்: மிகப் பெரிய தேகம் கொண்டவன் அதிகாயன்; அந்த அதிகாயன் என்று வழங்கிய; பேர் கொன்றவன்: அப்படிப் புகழ் வாய்ந்த பேரையே இல்லாமல் ஆக்கிவிட்டான் அப்பா, ராமனது தம்பியாகிய இலக்குவன்;

பின்பு நின்றார்: அவனது தம்பிமார்; ஊர் கொன்றவனுற் பிறரால் எனா: இலங்கையை அழித்த அனுமனாலும் மற்ற வானரப் படைகளாலும் உயிர் விட்டனர் என்று;

உற்றதெல்லாம்: நேர்ந்ததை யெல்லாம்; தார் கொன்றையினன் கிரி சாய்த்தவன் தானுரைத்தான்: கொன்றை மாலைச் சூடிய சிவபெருமானது கைலையங்கிரியைச் சாய்த்தவன் என்றெல்லாம் கவி பாடிப் புகழ் கொண்ட ராவணன் சொன்னான்.]

* * *

அதிகாயன் முதலியவர்கள் உயிர் துறந்தார்கள் என்று கேட்ட மாத்திரத்தில் இந்திரஜித்துக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது.

இலக்குவனும் ஊரை எரித்த அனுமனுந்தான் கொன்றார்கள் என்று கேட்ட மாத்திரத்தில் மேலே சொன்ன துக்கம் போய், கோபமே வந்து விட்டது, இந்திரஜித்துக்கு.

"இலக்குவனா கொன்றான், அனுமனா கொன்றான், அல்ல, நீதான் கொன்றாய்."

'கொன்றார் அவ
ரோ,கொலை சூழ்கென
நீகொடுத் தாய்
வன்தா னையர்
மானுடர் வன்மை
அறிந்தும்மன் னா!
என்றா னும்
எனைச்செல ஏவலை!
என்இதென் றான்?'
நின்றான் நெடி(து)
உன்னி,மு னிந்து
நெருப்புயிர்ப் பான்.

[கொன்றார் அவரோ: இலக்குவனும் அனுமனுமா கொன்றார்கள்—அல்ல; கொலை சூழ்கென நீ கொடுத்தாய்: கொலையுண்டு சாவுங்கள் என்றல்லவா நீ அனுப்பினாய் அவர்களை; வன்தானையர் மானுடர்: வலிய சேனை பலம் உள்ள ராம லக்ஷ்மணருடைய; வன்மை அறிந்தும்: வலிமையை நீ அறிந்தும் தானே கொடுத்தாய்; மன்னா: ராவணனே!

என்றானும் எனைச் செல ஏவலை: எந்த நாளிலும் (ஒரு நாளுமே) என்னைப் பகைவர் மேல் போர் செய்யச் சொல்லி ஏவவில்லை; என் இது என்றான்: ஏன் இப்படிச் செய்திருக்க வேண்டும் என்று; நின்றான் நெடிதுன்னா: விஷயம் தெரியவில்லையே என்று நெடு நேரம் யோசித்தவனும் அப்படியே நின்று விட்டான்;

முனிந்து நெருப்புயிர்ப்பான்: மிக்க கோபம் கொண்டு நெருப்புப்போல கொதிக்கும் பெரு மூச்சு விட்டவனான இந்திரஜித்து — நின்றான் நெடிதுன்னி.]

சாம்ராஜ்யத் திமிரில் வளர்ந்தவன் இந்திரஜித்து. துக்கம், கோபம் எல்லாம் பொங்கி எழுந்து வருகிறது. எல்லாம் சேர்ந்து விளக்குகிறது இந்திரஜித்தாகிய அரிய பாத்திரத்தை.

# நடிகருக்குக் கடிதம்

**கமலா சக்கரவர்த்தி**

அகில இந்தியப் புகழ் பெற்ற ஸ்ரீ நவீன் குமார் தமது அறையில் ஒரு நாற்காலியில் சாய்ந்தபடியே மிகுந்த கவனத்துடன் ஏதோ படித்துக் கொண்டிருந்தார். அவருடைய வாய் மட்டும், 'அதிர்ஷ்டம் அடித்தாலும் அடித்தது. இந்த ஹிந்தி படங்களில் கூட அல்லவா நம்மைக் கதாநாயகனாக எடுத்துக்கொள்ள முன் வருகிறார்கள்! ஆனால் இந்தச் சனியன் பிடித்த ஹிந்தி எவ்வளவு பிரயத்தனப்பட்டும் வாயில் நுழைய மாட்டேன் என்கிறதே!' என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

அதே சமயத்தில் வேலைக்காரன் ஐந்தாறு கடிதங்களைக் கொண்டு வந்து வைத்துவிட்டுப் போனான். ஒன்று அவர் தாயாரிடமிருந்தும் மற்றொன்று அவருடைய தமக்கையிடமிருந்தும் வந்திருந்தது. அவற்றில் 'பணம் தேவை! பணம் தேவை!' என்ற பாட்டைத் தவிர வேறு என்ன இருக்கப் போகிறது? இந்த இரண்டு வருடப் பிரபல்யத்தில் அவர் கண்ட பலன்தான் என்ன? 'மேக்-கப்' செய்து கொள்வதையும், இரவு பகல் உழைப்பதையும், பம்பாய் கல்கத்தா என்று ஓடுவதையும் தவிர வாழ்க்கையில் உண்மையாகவே வேறு என்ன பற்றுதல் இருக்கிறது? — இவ்வாறு மனத்தில் எண்ணமிட்டுக் கொண்டே அவர் மற்ற கடிதங்களை ஆராயலானார். அவை அநேகமாக 'பான்-மெயில்' என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் ரசிகர்களின் பாராட்டுக் கடிதங்களாகவே இருந்தன. அதில் ஒரு கடிதம் அவரது கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது.

மாதுங்கா, பம்பாய்

*என் அன்பார்ந்த மிஸ்டர் நவீன் குமார்,*

*இதுவரையில் நீங்கள் நடித்திருக்கும் ஒரு படத்தையாவது நான் பார்க்கத் தவறியது கிடையாது. தாங்கள் நடிப்பதற்கென்றே பிறந்திருக்கிறீர்கள் என்பது என்னுடைய உறுதியான அபிப்பிராயம். தங்கள் நடிப்பைப் பார்க்கப் பார்க்க எனக்கும் சினிமா உலகில் சேர வேண்டும் என்ற அபரிமிதமான ஆசை பொங்குகிறது. அதிலும் தங்களுடன் சேர்ந்து முதல் படத்தில் நடிக்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிட்டுமானால் அதைவிட நான் அடையக் கூடிய பாக்கியம் வேறொன்றும் இல்லை. தாங்கள் கிருபை கூர்ந்து டைரக்டர் அவர்களிடம் சிபார்சு செய்ய வேணும்.*

*தங்கள் பதிலை ஆவலுடன் எதிர்நோக்கும்,*

*ராஜம்.*

நவீன் குமார் கடிதத்துடன் மற்றொரு காகிதத்தில் சுற்றப்பட்டிருந்த புகைப் படத்தை மெதுவாக வெளியில் எடுத்தார். போட்டோவில், கையில் பூங்கொத்துடன் ஒரு இளம் பெண் காட்சி யளித்தாள். ஆஹாஹா! என்ன அழகு! என்ன அழகு! என்ன உருவம்! நம் ஊரில் இவ்வளவு உயரமுள்ள பெண்கள்தான் ஏது? கடிதம்தான் எவ்வளவு கச்சிதமாகவும் அழகாகவும் எழுதி யிருக்கிறாள்?— என்றெல்லாம் எண்ணமிட்டார். சற்று முன் தனக்கு வாழ்க்கையில் ஒருவிதமான பற்றுதலும் இல்லாமல் இருப்பதைக் குறித்து வருந்தியதை நினைத்து அவருக்குச் சிரிப்பு வந்தது. மறு கணம் அவர் மனம் அவரைக் கற்பனை லோகத்துக்கே இழுத்துச் சென்றுவிட்டது. பம்பாய்-மாதுங்கா போட்டோவை விட நூறு மடங்கு அழகுள்ள ராஜமும் தானும் ஒரே படத்தில் கதாநாயக நாயகியாக நடித்து, பின்பு வாழ்க்கையிலும் அப்படி மாறுவது எல்லாம் திரைப்படம் பார்ப்பதைப்போல அவர் மனக்கண் முன் ஒன்றன்பின் ஒன்றாகத் தெளிவாகத் தோன்றின. தாம் இது வரையில் நடித்திருக்கும் படங்களில் நடத்திய காதல் கட்டங்கள் யாவும் நினைவிற்கு வந்தன.

கற்பனை உலகிலிருந்து விடுபட்ட ஸ்ரீ நவீன் குமார் ஒரு தந்திக் கூப்பனில், தான் மறுநாள் கிளம்பி பம்பாய்க்கு வருவதாகவும் தன்னைத் தாதர் ஸ்டேஷனில் சந்திக்கும்படியாகவும் ஸ்ரீமதி ராஜத்துக்கு எழுதப் போனார் அதே சமயம், தாம் போட்டோவைப் பார்க்கும் அவசரத்தில் அதைச் சுற்றப்பட்டிருந்த காகிதத்தில் ஏதோ எழுதி யிருந்ததைக் கவனியாமலிருந்தது நினைவுக்கு வந்தது. அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

பின் குறிப்பு:—இத்துடன் வைத்திருக்கும் போட்டோ நான் "மாதுங்கா அமெச்சூர் நாடக சபை"யில், பெண் வேஷம் போட்டுக் கொண்டு கதாநாயகியாக நடித்தபோது எடுத்த படம். தற்சமயம் கைவசம் வேறு போட்டோ இல்லாமையாலும், பெண் வேஷத்தில் இருந்தபோதிலும் முக வெட்டு தெளிவாக இருப்பதால் இதை அனுப்புகிறேன். என்னுடைய உயரம் ஐந்தடி ஏழு அங்குலம். சுமாராகப் பாடுவேன். கூடிய சீக்கிரம் 'புல்-சூட்' அணிந்த ஒரு போட்டோ அனுப்புகிறேன். சிரமத்திற்கு மன்னிக்கவும். ராஜம்.




## 5. வழி பிறந்தது!

கடைசியாக ராஜ குமாரனைப் பார்த்து விட்டுத் திரும்பி வந்ததிலிருந்து சுந்தரியின் மனம் தீவிரமான சிந்தனையில் ஈடுபட்டது. இப்பொழுது அவள் கண்ணீர் வடிக்கவில்லை. எப்படி அவனை அடைவது என்று ஆழ்ந்து யோசிக்க ஆரம்பித்தாள். இரவெல்லாம் யோசித்தாள்.

'இது என்ன பைத்தியக்கார யோசனை! கடல் கன்னிகை ஒருத்தி மண்ணுலகில் வாழும் அரசகுமாரனின் கரம் பிடிக்க முடியுமா? இந்த உருவம் மாறி மனித உலகில் வாழும் அரச குமாரியாக மாற முடியாதா? முடியவே முடியாதா?' என்று சுந்தரி தனக்குத்தானே கேட்டுக் கொண்டாள். அப்பொழுது அவளுக்கு அறிவும் வயதும் முதிர்ந்த தன் கிழப் பாட்டியின் நினைவு வந்தது.

ஆகா! பாட்டி ஒருத்தி இருக்கிறாளே! பழங்கால சமாசாரங்களெல்லாம் அவளுக்கு நன்றாய்த் தெரியுமே! கடல் கன்னிகைகள் உருவம் மாறி மனிதப் பெண் உருவத்தை அடையும் வழி அவளுக்குத் தெரிந்திருக்குமே! அவளிடம் சென்று நடந்த விஷயம் அவ்வளவையும் சொல்லி விடலாம். அவள் நிச்சயம் நமக்கு ஏதாவது நல்ல யோசனை சொல்லக்கூடும்!' என்று சுந்தரி தீர்மானித்தாள்.

கடல் கன்னிகைகளின் பாட்டி கடலுக்கு அடியில் எத்தனையோ மைல்களுக்கு அப்பால் இருந்தாள். அவள் கடல் கன்னிகைகளுக்குள் மிகவும் வயது முதிர்ந்தவள்; அவளுக்கு வயது இருநூறுக்கு மேல் இருக்கும். அவள் எத்தனையோ ஆயிரம் ஆயிரம் இரவுகளைப் பார்த்திருக்கிறாள். அதே மாதிரி எத்தனையோ ஆயிரம் பகலையும் பார்த்திருக்கிறாள். சமுத்திர லோகத்தில் அவள் பார்த்த புயல்களுக்கு அளவே கிடையாது. புயலில் அடிபட்டுப் போன கப்பல்களையும் எத்தனையோ பார்த்திருக்கிறாள்.

அந்தப் பாட்டியின் நினைவு வந்த உடனே சுந்தரிக்கு உடம்பில் புதிய தெம்பு உண்டாயிற்று. உடனே உற்சாகத்துடன் நீலமாளிகையை விட்டுப் புறப்பட்டாள். நீல மாளிகை அந்த நடுநிசியில் மிகவும் அமைதியோடு விளங்கியது. சுந்தரியின் சகோதரிகளும் தாயாரும் மற்றுமுள்ள அரச குடும்பத்தைச் சேர்ந்த கடல் கன்னிகைகளும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தனர்.

கடல் அலைகள் தூங்கின; கடலில் வாழும் மீன் இனங்கள் தூங்கின; கடலில் வீசும் பேய்க்காற்றும் தூங்கியது. அந்தப் பாதி ராத்திரியில் தூங்காமல் இருந்தது சுந்தரி ஒருத்தி தான். தான் பாட்டியிடம் ராஜகுமாரன் விஷயமாகப் போவது ஒருவருக்கும் தெரியக்கூடாது என்பதற்காகவே அவள் நடுநிசியில் புறப்பட்டாள்.

கடல் கன்னிகைகளுக்குத்தான் பகல், இரவு என்ற வித்தியாசமே இல்லையே! எப்போதும் எங்கு இருட்டிலும் நன்றாய்க் கண் தெரியும் அவர்களுக்கு.

மூன்று பகல்களும் மூன்று இரவுகளும் விடாமல் தொடர்ந்து ஆழ்கடலுக்கு அடியிலே சென்றாள்.

சுந்தரியைக் கண்டதும் பாட்டிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. அவளை அன்போடு அணைத்துக் கொண்டாள்; நீல மாளிகையில் உள்ள ஒவ்வொருவரையும் பற்றி விசாரித்தாள். பேசிக் கொண்டேயிருந்த பாட்டி சுந்தரியின் முகத்தைப் பார்த்தாளோ இல்லையோ அவளுடைய முகத்தில் இருந்த சந்தோஷக் களை மறைந்தது.

"குழந்தாய், சுந்தரி! உன் முகம் ஏன் இப்படி வாடியிருக்கிறது? கடல் கன்னிகைகளுக்கு மனவருத்தம் என்பதே கிடையாதே! அப்படியிருக்க நீ முக வாட்டத்துடன் இருப்பானேன்?" என்று மிகவும் அன்போடு சுந்தரியின் தலைமயிரைக் கோதிக் கொண்டே கேட்டாள் பாட்டி.

"பாட்டி, நான் என்னத்தைச் சொல்லட்டும்? நம் இனத்தைப் பற்றி நீ புகழ்ந்து பேசுவதைக் கேட்க எனக்கு மிகவும் வேதனையாயிருக்கிறது. ஏற்கெனவே உள்ளூற அரித்துக் கொண்டிருக்கும் என் மன வேதனை இன்னும் அதிகமாகிறது!" என்று கூறிவிட்டு, சுந்தரி விவரமாக எல்லாவற்றையும் சொன்னாள்: "பாட்டி, போன மாதம் நான் முதல் முதலில் கடலின் மேல் புறத்தில் நீந்தச் சென்றேன். அப்பொழுது ஒரு கப்பல் வந்தது; சிறிது நேரத்துக்கெல்லாம் கடும் புயல் வீசிக் கப்பல் கவிழ்ந்தது;



கப்பலில் வந்தவர்களில் ஒரு ராஜகுமாரனைத் தவிர மற்றவர்களெல்லாம் போன இடம் தெரியவில்லை. அந்த ராஜகுமாரன் மட்டும் சமுத்திரத்தில் மூழ்கி மூழ்கி உயிருக்கு யமனோடு போராடினான். நான் அச்சமயம் அவனைக் காப்பாற்றி, ஒரு முறிந்து போன கப்பல் பலகையில் கிடத்தி மெதுவாக நீந்திக் கொண்டே வந்து கரை சேர்த்தேன். மூச்சுத் திணறும் போது அவன் என்னைக் கண்டதும் பார்த்த பார்வையை என்னால் இன்னும் மறக்க முடியவில்லை."

பாட்டி மகா புத்திசாலியாதலால் சுந்தரி பாதிக் கதை சொல்லும்போதே மீதிப் பாதியை அவளாகவே ஊகித்துத் தெரிந்து கொண்டு விட்டாள்.

"அடி, பேதைப் பெண்ணே! நம் குலத்துக்கு அடுக்காத காரியத்தைச் செய்ய விரும்புகிறாயே! மனிதர்களுக்கும் நமக்கும் எந்த விதத்திலும் பொருத்தம் இல்லை. நாம் நூறாண்டுக்குமேல் வாழ்ந்திருந்து துன்பம் என்ன என்பதையே அறியாமல் இருப்பவர்கள். மனிதர்களோ சதா மரண பயத்துடன் வாழுபவர்கள். அதோடு அவர்களுக்கு நோய் நொடிகளின் பயம் வேறு. ஒவ்வொரு விஷயத்திலும் அவர்களுக்கு ஓயாத கவலை. அந்த ராஜ குமாரனோடு நீ சேர்ந்து வாழுவது என்பது நடக்காத காரியம். ஜலத்தில் வாழுவது மனிதனால் முடியாத காரியம். மனித உலகத்தில் வாழ நம்மால் முடியாது!" என்று பாட்டி கண்டிப்பாகச் சொன்னாள்.

"பாட்டி, நம் இனத்தைப் பற்றியும், நாம் கடலில் வாழும் விதத்தைப் பற்றியும் சொல்லி நீதான் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டும். அந்த ராஜகுமாரனை ஒரு தடவை பார்த்தால் நீ இப்படியெல்லாம் சொல்ல மாட்டாய். நான் என்ன முயற்சி செய்தாலும் என்னால் அந்த ராஜகுமாரனின் முகத்தை மறக்கவே முடியவில்லை!" என்று கூறிச் சுந்தரி 'பொல பொல'வென்று கண்ணீர் விட்டாள்.

பாட்டியின் மனம் இளகி விட்டது.

"சுந்தரி, நான் சொல்லுவதைக் கொஞ்சம் கவனமாய்க் கேள். நீ அந்த ராஜகுமாரன் மேல் ஆசை கொண்டிருக்கிறாய். அதே மாதிரி



அவனும் உன் மீது ஆசை கொண்டிருக்கிறானா என்று நீ முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்" என்றாள்.

"பாட்டி, எனக்கு நன்றாய்த் தெரியும். அவருக்கு என்னை அடைய வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. கடலிலிருந்து காப்பாற்றி அவரைக் கரை சேர்த்த பிறகு, அவர் தன் நினைவை அடைந்ததும் முதலில் என்னைத்தான் தேடினார். கடல் அலைகளுக்கு மத்தியில் மறைந்து கொண்டு நான் அவருக்குத் தெரியாமல் அவரைப் பார்த்தேன். அவர் விழிகளில் பொங்கிய ஆர்வம் அவர் மனதில் இருப்பதைத் தெளிவாகக் காட்டி விட்டது! இதில் சந்தேகமே இல்லை."

"அடி, பேதைப் பெண்ணே! தன்னைக் காப்பாற்றியது ஒரு கடல் கன்னிகை என்று தெரிந்தால் அவன் உன்னைப் பற்றிப் பேசமாட்டான்!"

"அதற்குத்தான் பாட்டி, நான் எப்படியாவது மனித சாதிப் பெண்ணாக மாறிவிட வேண்டும் என்று ஆசைப் படுகிறேன்! மனிதர்களைப் போல் நமக்கும் கால்கள் உண்டாகி விட்டால் பிறகு நமக்கும் அவர்களுக்கும் வித்தியாசம் இருக்காதல்லவா?"

"சுந்தரி, இது என்ன ஆசை! ஈசுவர சிருஷ்டியை மாற்ற முடியுமா? அதைவிட உன் மனசை மாற்றிக் கொள்ளுவதுதான் நல்லது."

"பாட்டி, நான் எப்படியாவது மனித உருவத்தை அடைந்தாக வேண்டும். அதற்கு ஏதாவது வழி உண்டென்றால் சொல்லு! இல்லையென்றால் நான் என் உயிரை விட்டு, அந்த ராஜகுமாரனை மறு பிறப்பிலாவது அடைந்து கொள்கிறேன்!"

இதைச் சொல்லி முடிக்கும்போது சுந்தரியின் முகத்தில் விவரிக்க முடியாத சோகமும் கோபமும் ஆத்திரமும் பிரதிபலித்தன.

"சுந்தரி, வருந்தாதே! உன் மனசைச் சோதிப்பதற்காகச் சொன்னேன். கிழக்கே பத்து மைல் தூரம் சென்றால் ஒரு மலை ஜலத்துக்கு மேலே தென்படும். அதிலே ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருப்பார். அவர் காலை வேளையில் கடற்கரை ஓரமாகச் சிறிது நேரம் உலாவுவார். அந்தச் சமயம் அவர் காலில் விழுந்து நீ நடந்ததை யெல்லாம் சொல்லு. அவர் மனசு இரங்கினால் நீ உருவம் மாறி மனிதப் பெண்ணாகலாம். ஆனால் வழியில் உனக்கு எத்தனையோ விபத்துக்கள் ஏற்படும். அந்தச் சமயத்திலெல்லாம் நீ தைரியமாகச் சமுத்திர ராஜனைத் தியானம் செய். அப்பொழுது அந்த விபத்துக்களிலிருந்து தப்பலாம். இந்த மோதிரத்தை வைத்துக் கொள். இது உனக்கு மனித பாஷையில் பேசும் சக்தியைக் கொடுக்கும். தைரியமாகப் போ!" என்றாள் பாட்டி.

சந்தோஷ மிகுதியில் சுந்தரியினால் பேசவே முடியவில்லை. ஆனந்தத்துடன் அந்த மோதிரத்தை வாங்கி அணிந்து கொண்டாள். சின்னக் குழந்தையைப்போல் 'தடதட'வென்று சமுத்திர ஜலத்தைக் கைகளினால் அடித்து இப்படியும் அப்படியும் ஆடினாள். கடல் கன்னிகைகளுக்குக் கால்கள் இல்லையல்லவா? ஆகையினால் அவளால் எழுந்து நின்று குதிக்க முடியவில்லை. அதற்காக அவள் சும்மா இருந்துவிடவில்லை. மீன் போன்ற தன் வாலை ஆட்டிக்கொண்டு இங்கும் அங்கும் நீந்தினாள். (தொடரும்)



# நஷ்டஈடு

பி. எஸ். மணி

"ஏண்டா, முனியா! என் உப்பைத் தின்று உனக்குத் திமிரு வளர்ந்து போச்சோ? மெள்ள ஆடி அசைந்து வேலைக்கு வருகிறாயே!" என்று கோபத்துடன் சமாழிந்தார் மேலப்பண்ணை பரமசிவம் பிள்ளை.

"எசமான்! நாய் கடிச்சிடுத்துங்க. நடக்க முடியலீங்க. அதைத்தான் சொல்லிட்டுப் போகலாமென்று வந்தேனுங்க" என்று தயக்கத்துடன் பதிலளித்தான் முனியன்.

"நாய் கடிச்சால் என்ன? வேலைசெய்ய முடியாதா? ஏண்டா! பொய்ச் சாக்கு சொல்கிறாய்? எந்த நாய் கடித்தது?" என்று முகம் கடுகடுக்கக் கேட்டார் பரமசிவம் பிள்ளை.

"எசமான்! நம்ம பண்ணை நாயும் கீழப் பண்ணை நாயும் நேற்று கருக்கல்லே சண்டை போட்டுக்கிட்டு இருந்ததுங்க. அப்போ கீழப்பண்ணை நாயை வாலைப் பிடித்து விலக்கினேன். கடிச்சுட்டதுங்க" என்றான் முனியன் கண்ணைக் கசக்கிக் கொண்டே.

"என்ன முனியா! கீழப்பண்ணை நாயா உன்னைக் கடித்தது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் பண்ணையார். அவர் முகத்தில் அவ்வளவு நேரமுமிருந்த கோபக்குறி மாறிச் சந்தோஷம் தாண்டவமாடியது. ஆமாம்! அவர் வெகுநாட்களாகக் கீழப்பண்ணை கணபதியாப் பிள்ளையை எப்படியாவது அவமானப் படுத்த வேண்டும் என்று தீர்மானித்திருந்தார். அதை நிறைவேற்றத் தக்க சமயம் வாய்த்ததை யறிந்ததும் அவர் மகிழ்ச்சியடைந்ததில் ஆச்சரியமில்லைதானே?

"அட பாவி! அதை முதலிலேயே சொல்றதுக்கென்ன? முதலிலே போலீஸிலே போய் எழுதிவைச்சுட்டு வரலாம், வா! பிறகு ஆஸ்பத்திரிக்குப் போகலாம்" என்றார்.

பண்ணையாருடைய கோபம் அடங்கி விட்டதை யறிந்த முனியன், "ஆகட்டுங்க. நீங்க என்ன சொன்னாலும் கேட்கிறேனுங்க" என்றான் பணிவாக.

மேலப்பண்ணை பரமசிவம் பிள்ளை உடனே அவனை அழைத்துச் சென்று போலீஸில் எழுதி வைத்துவிட்டுப் பின் அவனை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார். ஆஸ்பத்திரியில் அவனுக்கு நடந்த ஆசார உபசாரங்களுக்கு அளவில்லை. இதுவரை சாப்பிட்டிராத பழங்களும் ஆகாரங்களும் அவனுக்குக் கிடைத்தன. பண்ணையார் பரமசிவம் பிள்ளையே அடிக்கடி வந்து அவனைப் பார்த்துவிட்டுப் போனார். தன் எஜமானரின் பேரன்பைக் கண்டு திகைத்துப் போனான் முனியன். அவர் வந்த சமயம் அவன், "எசமான்! நீங்க செய்கிற உதவிக்கு என் உடம்பைச் செருப்பாகத் தைத்துப் போட்டால்கூடக் காணாது" என்றான்.

ஒருவாரமும் கழிந்தது. முனியன் தொடர்ந்த வழக்கு அன்று கோர்ட்டில் விசாரணைக்கு வந்தது. முனியன் சிறிதே குணமடைந்திருந்தும் அவனை அழைத்து வந்திருந்தார்கள். மேலப்பண்ணை பரமசிவம் பிள்ளை அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்தார். அவர் 'தான் கீழப் பண்ணை கணபதியாப் பிள்ளையை அவமானப்படுத்தி விட்டோம்' என்ற பெருமதிப்பில் சென்று கொண்டிருந்தார்.

மணி பதினொன்று அடித்தது. கோர்ட்டில் வழக்கு ஆரம்பமாயிற்று. முனியன் வக்கீல் எழுந்திருந்து, "நீதிபதி அவர்களே! இதோ சாட்சிக் கூண்டில் நிற்கும் முனியன் மேலப்பண்ணை பரமசிவம் பிள்ளையின் வேலையாள். இவனைக் கீழப் பண்ணை கணபதியாப் பிள்ளையின் நாய் கடித்து விட்டது. அதற்கு நஷ்ட ஈடு கோருவதற்காக வழக்கு தொடர்ந்திருக்கிறோம்" என்று கூறிவிட்டு உட்கார்ந்தார்.



பிறகு கீழப்பண்ணை கணபதியாப் பிள்ளையின் வக்கீல் எழுந்து வந்து முனியனைக் குறுக்குக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

"முனியா! உன்னைத் தானே நாய்கடித்தது?" என்று குத்தலாகக் கேட்டார் எதிரி வக்கீல்.

"ஆமாங்க. கீழப் பண்ணை நாய் என்னைப் பலமாகக் கடிச்சுட்டுதுங்க" என்றான்.

"சரி! நாய் உன்னைக் கடிப்பானேன்? நீ ஏதாவது விஷமம் செய்தாயா?" என்று கேட்டார் எதிரி வக்கீல்.

"நான் எதற்குங்க அதனிடம் விஷமம் பண்ணப் போறேன்? எங்க பண்ணை நாயும் கீழப்பண்ணை நாயும் சண்டை போட்டுக் கொண்டு இருந்ததுங்க. நான் உடனே கீழப்பண்ணை நாயின் வாலைப் பிடித்து இழுத்துச் சண்டையை விலக்கினேன். அது கடிச்சுட்டுதுங்க" என்றான் முனியன்.

"சரி! உன்னை எப்போது நாய் கடித்தது?" என்று கேட்டார் எதிரி வக்கீல்.

"கருக்கல் நேரமுங்க. எப்படிப் பாய்ந்து கடிச்சது, தெரியுங்களா?" என்று நாய் கடித்த விவரத்தைக் கூற ஆரம்பித்தான்.

"போதும், நிறுத்து!" என்று எதிரி வக்கீல் கூறிவிட்டு நீதிபதி பக்கம் திரும்பி, "யுவர் ஹானர்! முனியன் இருட்டும் சமயத்தில் தன்னை நாய் கடித்ததாகக் கூறுகிறான். வாலைப் பிடித்து இழுத்துச் சண்டையை நிறுத்தியதாகக் கூறுகிறான். எங்கள் கட்சிக்காரர் அவர் நாய்க்கு வாலே இல்லை என்கிறார். அதைப் பிரத்யட்சமாக நிரூபணம் செய்ய அந்த நாயையே இங்கு கொண்டு வந்திருக்கிறார்" என்று கூறி விட்டுப் பின் பக்கம் திரும்பினார். அப்பொழுது கீழப்பண்ணையைச் சேர்ந்த வேலைக்காரன் ஒருவன் அந்த வாலில்லாத நாயைக் கொண்டு வந்து நீதிபதியின் முன்பு நிறுத்தினான்.

பிறகு கீழப்பண்ணை வக்கீல் மறுபடியும் எழுந்திருந்து, "நீதிபதி அவர்களே! இதிலிருந்து முனியன் வாலைப் பிடித்து இழுத்த நாய் மேலப் பண்ணையைச் சேர்ந்தது. ஆதலால் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியது மேலப் பண்ணையார் தான்" என்று கூறிவிட்டு உட்கார்ந்தார்.

நீதிபதியும் கீழப்பண்ணையார் மீதுள்ள வழக்கைத் தள்ளுபடி செய்து, முனியனுக்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டியது மேலப் பண்ணை பரமசிவம் பிள்ளை தான் என்று முடிவு செய்தார்.

இதைக் கேட்டதும் மேலப்பண்ணை பரமசிவம் பிள்ளை அடைந்த ஆத்திரத்துக்கு அளவில்லை. யாரை அவமானப் படுத்த வேண்டும் என்று நினைத்தாரோ, அவர் அவமான மடைவதற்குப் பதிலாகத் தானே அவமான மடைந்ததைக் கண்டதும் அவர் மீசை துடித்தது. கோபமும் மூக்குக்கு மேல் வந்தது. என்ன செய்வார் பாவம்! கடைசியில் அவரே நஷ்ட ஈட்டை முனியனுக்குக் கொடுக்க வேண்டியதாயிற்று. வீட்டுக்கு வந்ததும் முதல் காரியமாக முனியனை வேலையை விட்டு நீக்கிக் கீழப் பண்ணையார் மீதிருந்த தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டார்.

முனியன் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் வழியில்லாமல் போனதை நினைத்து வழி நெடுக வருத்தப்பட்டுக் கொண்டே தன் வீட்டையடைந்தான் அங்கே கீழப் பண்ணை கணபதியாப் பிள்ளை நிற்பதைக் கண்டதும் அவனுக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவில்லை.

"என்ன முனியா! மிகவும் சோர்ந்து போய்க் காணப்படுகிறாயே, ஏன்?" என்று கேட்டார் கணபதியாப் பிள்ளை.

"இல்லைங்க, எசமான் என்னை வேலையை விட்டே நீக்கி விட்டாரு" என்றான் முனியன் வருத்தத்தோடு.

"கவலைப்படாதே, முனியா! இன்று முதல் நீ கீழப் பண்ணையின் வேலையாள். உன்னால் தானே அந்தக் கர்வம் பிடித்த பண்ணையாரை நான் அடக்க முடிந்தது? இன்றே வேலைக்கு வந்துவிடு!" என்றார் கீழப்பண்ணை கணபதியாப் பிள்ளை.

இதைக் கேட்ட முனியன் ஆச்சரியத்தில் ஒன்றுமே புரியாமல் திகைத்து நின்றான்!

# படித்த மருமகள்

கஸ்தூரி

பகவத் கீதையைக் கையில் பிடித்த பரமேஸ்வரய்யர் கர்மயோக அத்தியாயத்திலே மூழ்கி இருந்தார்.

வடாம் தட்டை எடுத்து வந்த சிவகாமி அம்மாள், அதை முற்றத்தில் வைத்து விட்டு அய்யரின் அருகே வந்து நின்றாள். பரமேஸ்வரய்யர் கர்மயோகத்தில் பதித்த கண்களை நிமிர்த்தவே யில்லை. தொண்டையை மெல்ல கனைத்துக் கொண்ட சிவகாமி அம்மாள், "நேற்று என்னாலே முடிந்தவரை கேட்டுப் பார்த்து விட்டேன். அவன் உங்களுக்குப் பிள்ளைதானே? அந்தப் பிடிவாத குணம் எங்கே போய்விடும்? நீங்களாகிலும் கொஞ்சம் கண்டித்துச் சொல்லிப் பார்க்கக் கூடாதா?" என்று ஆற்றாமையுடன் கூறினாள்.

"நீதான் ஆறு மாசமாய்ச் சொல்லி சொல்லிப் பார்க்கிறாயே! இன்னும் நான் வேறு என்னத்தைச் சொல்லுகிறது? கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிறவன் அவன். குடும்பம் நடத்தப் போகிறவள் நீ. உங்கள் இருவருக்குள் எப்படியாகிலும் போங்கள். நடுவில் எனக்கு எதற்குப் பொல்லாப்பு?" என்று நிதானமாகக் கூறினார்.

சிவகாமி அம்மாளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "அடிகாலில் இருந்தே உங்களுக்கு இந்தத் தட்டிக் கழிக்கும் வழக்கம் பற்றிக்கொண்டு விட்டது. நான் ஒருத்தி எல்லாருக்கும் ஈடு கொடுத்து இதுவரை கௌரவமாய்க் குடும்பத்தை நிர்வகித்து வந்தேன். இனிமேல்தானே இருக்கிறது! கலெக்டர் வீட்டுப் பெண் வீட்டுக்குள்ளே நுழைந்ததும் எல்லாம் தெரிந்து விடுகிறது!" என்று பொரிந்துத் தள்ளினாள்.

"இதோ பார் சிவகாமி! உனக்கு ஏன் இந்தப் படித்தப் பெண்களைக் கண்டால் பிடிப்பதில்லையோ, தெரியவில்லை! நமக்கிருப்பது அவன் ஒருவன், அவன் இஷ்டப்பட்ட பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டு சந்தோஷமாக இருப்பதைப் பார்க்காமல், நீ ஏன் இப்படிக் குறுக்கிட்டு ரகளை செய்கிறாய்? அந்த மட்டிலும் அவன் விரும்பி மணக்கும் பெண் குலம் கோத்திரமெல்லாம் பொருந்தி, நமக்கு அந்தஸ்தான இடமாக இருக்கிறதே என்று எண்ணி நான் சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றார் பரமேஸ்வரய்யர்.

"சந்தோஷப்பட மாட்டேனா! முப்பதாயிரத்தோடு கலெக்டரின் சம்பந்தி ஆகிறேனே, சந்தோஷம் அற்ப சொற்பமாகவா இருக்கும்? அவளை வீட்டில் வைத்துக் கொண்டு படப் போகிறவள் நான்! நமக்கு அடங்கிய பெண்ணைப் பார்த்துக் கட்டினால், குடித்தனம் பாங்காகவும் கூட மாட ஒத்தாசையாகவும் இருக்கும். இந்தக் காலேஜ் குமாரிக்குப் பணிவிடை நானே செய்யவேண்டி வருமே. நாமும்தான் பார்க்கிறோமே, அந்தக் கோமளம் மாமி தன் பம்பாய் நாட்டுப் பெண்ணைப் பற்றி அனந்த பெருமைகளை எல்லாம் பார்த்து விட்டோமல்லவா? ஒரு வேளைக்கு வீடு தங்குவதில்லை. அங்கே மீட்டிங், இங்கே டீ பார்ட்டி, அங்கே திறப்புவிழா, இங்கே மூடு விழா என்று சுற்றிக் கொண்டே இருக்கிறாள். பாவம்! இந்த வயதான காலத்திலே கோமளம் மாமி குடும்பம் நடத்த வேண்டி இருக்கு! அவ்வளவு தூரம் போவானேன்? உங்கள் சின்ன அண்ணா, எஞ்சினீயர் வீட்டில் சம்பந்தம் செய்தாரே, கடைசியில் பையன் மாமனார் வீடே கதி என்றாகி விட்டான். இவ்வளவெல்லாம் பார்த்தும் உங்களுக்கோ, அவனுக்கோ தெரியவில்லை; நான் என்ன செய்ய முடியும்?" என்று ஆத்திரத்தோடு கூறிவிட்டுச் சரசர வென்று மறைந்து விட்டாள் சிவகாமி யம்மாள். மறுபடியும் கர்மயோக அத்தியாயத்திலே மூழ்கினார் பரமேஸ்வரய்யர்.

அப்போது அங்கே வந்த காமுப் பாட்டி, "சிவகாமு!" என்று அருமையாகக் கூப்பிட்டுக் கொண்டே சமையலுள்ளில் நுழைந்தாள்.

சிவகாமி அம்மாள் தனக்கிருந்த எரிச்சலில் பதில் கூடக் கொடுக்காமல் பிரமாத வேலை செய்வது போல் காட்டிக் கொண்டாள்.

"என்னடி சிவகாமு! இன்றைக்குச் சங்கு அபிஷேகத்திற்கு போகலா மென்றேனே, மறந்து விட்டாயா?" என்றாள் காமுப் பாட்டி.

"ஆ......மாம். என் கட்டைக்குச் சங்கு அபிஷேகமும் கும்பாபிஷேகமும் தான்

வேண்டிக் கிடக்கிறது. எனக்கு எல்லா அபிஷேகமும் அடுப்பங்கரையிலேதான்!" என்று சலித்துக் கொண்டாள் சிவகாமியம்மாள்.

"உனக்கு என்ன அம்மா குறை? ஏன் இப்படி அலுத்துக் கொள்கிறாய்? நாளைக்கு மகாலக்ஷ்மியாட்டம் மருமகள் வரப்போகிறாள். அவள் பார்த்துக் கொள்கிறாள்" என்று சிறிது பொறுமையுடன் சொன்னான்.

அவ்வளவுதான்! சிவகாமி அம்மாளின் உள்ளத்தில் புகைந்து கொண்டிருந்த கோபம் நெய் விட்டது போல் 'குப்'பென்று சீறி எழுந்தது.

"மகாலட்சுமிபோல் மாத்திரமா, கலைவாணியைப் போல, பராசக்தியைப் போல எல்லாம் கூட இருப்பாளே என் மருமகள்! ஆனால், நான்தான் தாதிப் பெண்ணாக மாறி விட வேண்டும், சேவை செய்ய!" என்று பற்களைக் கடித்த சிவகாமி அம்மாள், "ஹூம்! இத்தனை நாள் எத்தனையோ கௌரவமாகக் காலம் தள்ளினேன். இனி என் வீட்டு விஷயம் எத்தனை பேர் வாயில் பட்டு ஊர் சிரிக்கப் போகிறதோ?" என்று அழமாட்டாத குறையாக நிறுத்தினாள். அழ மாட்டாக் குறை என்ன? அழுதே தீர்த்தும் அந்த அம்மாளின் மனோபீஷ்டம் நிறைவேறவில்லை. கடைசியில் அவளுடைய ஏக புத்திரனான கேசவன் மன்னூர் கலெக்டர் மகள் புவனாவையே மணந்து கொண்டான்.

## 2

கேசவனும் 'அம்மா சற்று கர்நாடகமாயிற்றே, புவனாவுக்கும் அம்மாவுக்கும் ஒத்துக் கொள்ளாதே, நடுவில் நாம்தானே இடிபட வேண்டி வரும்' என்று எண்ணி, "தனிக் குடித்தனம் இருக்கலாம், புவனா!" என்றான். எடுக்கும்போதே தன் கணவன் தனிக் குடித்தனத்தைப் பற்றிப் பேசியதைக் கேட்டு வியப்படைந்த புவனா, "ஏன், தனிக் குடித்தனம் செய்ய உங்களுக்கு ஆசையாக இருக்கிறதா?" என்றாள்.

"ஆசை ஒன்றுமில்லை, வெறுமனே தான்!"

"வெறுமனே வேறே போக வேண்டுமென்று தோன்றுமா? நமக்கு அப்படித் தோன்ற யார் இருக்கிறார்கள்? மைத்துனரா? ஓரகத்தியா? சின்ன மாமனார் பெரிய மாமனார் என்று யாராகிலும் இருக்கிறார்களா? நாம் ஏன் எடுத்ததும் தனிக்குடித்தனம் செய்ய வேண்டும்?" என்று விடாப்பிடியாகக் கேட்டாள்.

"இல்லை புவனா! உம்... என் அம்மா கொஞ்சம் பழைய காலைய பேர்வழி..."

"கொஞ்சமென்ன? முழுதும் பழைய காலைய பேர்வழியாகத்தான் இருக்கட்டுமே!" என்றாள் புவனா.

"அதனாலே உனக்கும் அம்மாவிற்கும் ஒத்துக் கொள்ளாது" என்றான் கேசவன்.

"ஏது! நாங்கள் பார்த்துப் பழகுவதற்குள் நீங்களே முடிவுகட்டி விட்டீர்களே; அழகாய்த்தான் இருக்கிறது! இனிமேல் இதுபோல் 'கன்னா பின்னா' வென்றெல்லாம் பேசாதீர்கள். யார் காதிலாகிலும் விழப் போகிறது."

"நீ இப்போது இப்படித்தான் பேசுவாய். ஒரு மாதம் அம்மாவுடன் இருந்து பார்த்து விட்டாயானால் தெரிந்துவிடும். நான் இப்போதே சொல்லி விடுகிறேன். சண்டை கிண்டை போட்டுக் கொண்டு மனஸ்தாபத்துடன் போவதைவிட ஆரம்பத்திலேயே..."

"என்னை என்ன சண்டைக்காரி என்று நினைத்து விட்டீர்களா? நீங்கள் பாட்டுக்குப் பேசாமல் நான் எப்படி நடந்து கொள்கிறேன் என்பதைப் பார்த்துக் கொண்டே இருங்கள்" என்று கூறி அவனை மேலே பேசவிடாது அடக்கி விட்டாள்.

செயலற்றவனாகி விட்டான் கேசவன்.

கேசவனிடம் வெகு தைரியமாகப் பேசிய புவனாவிற்கும் உள்ளூற பயமாகவே இருந்தது. உண்மையில் தன் மாமியாரைத் திருப்திப் படுத்தத் தன்னால் முடியுமா என்று சிந்தித்தபடியே தூங்கிப் போனாள்.

மறுநாட் காலை வழக்கம்போல் எட்டு மணிக்கு எழுந்தாள் புவனா. 'அடடா!



## முகம் மறந்து விட்டது!

மாஜிஸ்திரேட்:—உன்னை நான் முன்னமேயே பார்த்திருப்பதாக நினைவிருக்கிறதே!

வழக்காடுபவன் (ஒரு தையற்காரன்):—பார்த்திருக்கலாம்! எத்தனையோ பேர் என்னிடம் சட்டை தைத்துக் கொண்டு போகிறார்கள். ஆனால் பணம் கொடுப்பதில்லை. அவர்கள் முகத்தை நினைவு வைத்துக் கொள்ள முடிவதில்லை, ஸார்!

ஐந்து மணிக்கெல்லாம் எழுந்திருக்க வேண்டுமென்று தீர்மானித்திருந்தும் இப்படித் தூங்கி விட்டோமே! இவராகிலும் எழுப்பி இருக்கக்கூடாதா?' என்று எண்ணிக் கொண்டே தயங்கித் தயங்கிக் கீழே இறங்கி வந்தாள் புவனா.

அவள் எதிர்பார்த்தபடி மாமியாரின் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடிக்காமற்போனாலும், எதிர்பார்த்திருந்த ஒரு விஷயத்தைக் கண்டது போன்ற அதிருப்தி அந்த முகத்திலே நிலவியதைப் புவனா கவனியாமல் போகவில்லை. இனி இதைப் போன்ற சந்தர்ப்பத்திற்கே இடம் கொடுக்கக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

சிவகாமி அம்மாள் மருமகளிடம் ரத்தினச் சுருக்கமாகத்தான் பேசினாள். அதிகப் பேச்சுவார்த்தை வைத்துக் கொண்டால் மரியாதை கெட்டுப் போய்விடுமென்பது அந்த அம்மாளுடைய பயம். புவனாவே வலிய வலிய வந்து பேசலானாள். அதிகம் பேசினால் வாயாடிப் பெண் என்று நினைத்து விடப் போகிறாரோ என்று பயம் புவனாவிற்கும் இருந்தது.

முதல் இரண்டு நாட்கள் தன் புக்ககத்தில் நடக்கும் தினசரி வேலைகளைப் பார்த்துப் பதித்துக் கொண்டு விட்டாள். அடுத்த நாள் மாமனாரின் பூஜைக்காக வட்டில்கள், தட்டு, விளக்கு முதலியவற்றைப் புளியும் சாம்பலும் வைத்து அழுத்தித் துலக்கிக் கொண்டு வந்து வைத்தாள். கை சற்று எரிய ஆரம்பித்தது. அதைப் பொருட்படுத்தலாமா? அடுத்தபடியாகப் புஷ்பம், பழம், பாக்கு, வெற்றிலை எல்லாம் தயாராகியது. குளித்து விட்டு வந்த பரமேஸ்வரய்யருக்குத் தூக்கி வாரிப் போட்டது.

“சிவகாமி!” என்று உரக்கக் கூப்பிட்டார். முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு ஆஜர் ஆனாள் சிவகாமி அம்மாள். “அந்தக் குழந்தையை ஏன் இதையெல்லாம் செய்யச் சொன்னாய்?” என்று பதறினார் பரமேஸ்வரய்யர்.

“சும்மா குதிக்காதீர்கள், உங்கள் மருமகளுக்கு வேலையிட எனக்கு உரிமை இல்லை என்கிற விஷயம் முன்னதாகவே தெரிந்து தான் வைத்திருக்கிறேன்” என்றாள் சிவகாமியம்மாள்.

“அம்மா சொல்லவில்லை, நானாகத்தான் செய்தேன். அதனால் என்ன?” என்று கபடில்லாமல் தைரியமாகக் கேட்டாள் புவனா.

பரமேஸ்வரய்யர் அந்த நாளைய மனிதர். புதுமருமகளிடம் நேரிடையாகப் பேச வெட்கப்பட்டார். புவனா காலேஜ் குமாரி; அவள் களங்கமற்றுப் பேசினாள். பரமேஸ்வரய்யருக்குச் சந்தோஷம் தாங்கமுடியவில்லை. நாணிக் கோணி ஒதுங்குவதைவிட, பெற்ற தந்தையிடம் பேசுவதைப்போல் சங்கோசமின்றிப் பேசுவது அழகாய்த்தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டார்.

## 3

அதன் பிறகு சிவகாமி அம்மாளின் கைவேலையைப் பிடுங்கிச் செய்யலானாள் புவனா. இதைச் சிவகாமி அம்மாள் எதிர்பார்க்கவில்லைதான். என்றாலும் ‘புதுத் துடைப்பம் நன்றாய்ப் பெருக்கும்’ என்பதை நினைவு படுத்திக் கொண்டாள். மாமியாரைத் திருப்தி செய்யப் போய்க் கேசவனின் கோபத்திற்கு ஆளானாள் புவனா. “காலையில் காப்பி கொண்டுவந்து கொடுத்து விட்டுக் காற்றாய்ப் பறந்தவள் இராத்திரிக்கு வந்து எட்டிப் பார்க்கிறாய்! நான் ஒருவன் காத்துக் கிடப்பதையே மறந்து விடுகிறாய். இதோ பார்! நீ என்னதான் விழுந்து விழுந்து உபசரித்தாலும் அம்மா உன் வழிக்கு வரப் போகிறவள் இல்லை. அந்த முயற்சியை விட்டு விட்டு என்னையாவது திருப்தி செய். சீக்கிரம் உடை மாற்றிக் கொள். எங்காகிலும் வெளியே போய்விட்டு வரலாம். ஊம்!” என்றான்.

“அடேயப்பா! இதற்கா இத்தனை கோபம்? கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். இன்னும் இரண்டொரு மாதம் முயற்சி செய்து பார்க்கிறேன். வெற்றி கண்டு விட்டால் அப்புறம் உங்கள் இஷ்டப்

படி வெல்லாம் ஊர் சுற்றலாம்" என்று சுலபமாகச் சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்ப்பான்.

நாட்கள் போய்க் கொண்டிருந்தன. புவனாவின் மனத்திலும் சந்தேகம் தோன்ற ஆரம்பித்து விட்டது. தன் மாமியார் அத்தனை சீக்கிரம் தன் பிடிப்புக்குள் அகப்படுகிறவர் அல்ல என்பதைத் தெரிந்து கொண்டாள். அவளுக்கு உற்சாகம் குன்றி விட்டது. அந்தச் சமயத்தில்தான் சிவகாமி அம்மாளுக்கு ஜுரம் வந்துவிட்டது. சமயலுக்கு வேறு ஆளைப் பார்க்க வேண்டுமே என்று கவலைப் பட்டார் பரமேஸ்வரய்யர். புவனா மறந்து விட்டாள். நான்கு ஐந்து மாதமாக மாமியாருடன் கூடவே இருந்து கவனமாகப் பார்த்து வந்ததினால் வெகுநாள் பழக்கப்பட்டவள் போல் சமையல் செய்யலானாள். அத்துடன் வேளைக்கு வேளை சிவகாமி அம்மாளின் தேவைகளையும் மறக்காமல் பூர்த்தி செய்தாள். இரவில் கூடச் சில சமயம் கண் விழித்திருந்து சேவை புரிந்தாள். என்ன செய்தும் சிவகாமி அம்மாள் உடல் நிலை பழையபடி ஆவதற்கு இரண்டு மாதம் ஆகியது.

வரவு செலவு கணக்கைப் பார்த்த சிவகாமியம்மாள், அந்த இரண்டு மாதத்தில் தான் செய்வதைவிடப் புவனா குறைவாகச் செலவு செய்திருப்பதைக் கண்டு பிரமித்துப் போய் விட்டாள். படித்தப் பெண்! கலெக்டரின் மகள்! முன்பின் குடும்பம் நடத்தி அறியாதவள், தன்னைவிட ரொம்பச் சிக்கனமாக செடிருக்கிறளே! என்று வியந்தாள் சிவகாமியம்மாள்.

"படித்த பெண்களின் வழியே வேறு தான்! பாருங்களேன், இந்த இரண்டு மாதத்திலே எழுபது ரூபாய் மீத்திருக்கிறளே!" என்று தன் கணவரிடமே சொல்லிக் கொண்டாள் சிவகாமியம்மாள்.

இதைக் கேட்டுத் தமக்குள்ளே சிரித்துக் கொண்டார் பரமேஸ்வரய்யர்.

✶

நடுவிலே கேசவன்தான் ரொம்ப சங்கடப்பட்டு விட்டான். அதை கவனித்துக் கொண்ட சிவகாமியம்மாள் "கேசவா! அடிநாளிலே உங்கப்பா என்னைச் செய்தாற் போலவே நீயும் அவளை வீடே கதி என்று போட்டு வைக்கிறயே? அவளுக்கு அப்படி எல்லாம் அடைபட்டுக் கிடந்து பழக்கமே இருக்காதே! இனிமேல், தினமும் சீக்கிரம் ஆபீஸிலிருந்து வந்து அவளை எங்காகிலும் வெளியே அழைத்துக்கொண்டு போய் விட்டு வா!" என்று மனப்பூர்வமாக உத்திரவிட்டாள்.

அன்று சுந்தரேஸ்வரர் கோவிலிலே ஒரு கல்யாணம். மண்டபத்திலே சிவகாமி அம்மாளைச் சுற்றி உட்கார்ந்திருந்த பெண்கள் 'ஓ'வென்று இரைந்து கலகல வென்று சிரித்து அமர்க்களப் படுத்திக் கொண்டிருந்தனர். இதற்குக் காரணம் காமுப் பாட்டி தான். ஆனால் காமுப் பாட்டிக்கு ஏதோ நினைவு வரவே, "என்ன, சிவகாமு! ஒரு பிள்ளையைப் பெற்றும் உன் இஷ்டப்படி மருமகள் வாய்க்கவில்லையே!" என்றாள்.

"என் பாட்டி அப்படிச் சொல்கிறீர்கள்! என் மருமகள் போல் யாருக்கு வாய்க்கும்? பெரிய வீட்டுப் பெண்ணாயிற்றே, எப்படி இருப்பாளோ என்று கல்யாணத்திற்கு முன் பயந்தது உண்மைதான். நான் பயந்தபடி ஒரு விஷயம் கூட நடக்கவேயில்லை. நீங்கள் பெண் வீட்டுக்குப் போய் இருந்து விட்டீர்கள். நான் ஜுரமாகக் கிடந்த போது இராப்பகலாக உழைத்தாள். கொஞ்சமாகிலும் முகச்சுளிக்க வேண்டுமே! எத்தனைச் சமர்த்தாய்க் குடித்தனம் செய்திருக்கிறாள், என்கிறேன்! கல்யாணமாகி இத்தனை மாதமாகிறதே, அவனோடே எதிர் நின்று பேசி நான் பார்த்ததில்லை. அத்தனை அடக்க ஒடுக்கம்! நேற்று கலெக்டர் வந்திருந்தார் பெண்ணை அழைத்துப் போக. 'இப்போ எதுக்காக வரவேண்டும் அப்பா!' என்று சொல்லி அவரை ஊருக்கு அனுப்பி விட்டாள். எனக்கே சிறுசுகள் சிரித்துப் பேசாமல் இருப்பது பிடிக்கவில்லை. கேசவனைக் கோபித்துக் கொண்டேன்" என்று பெருமையாக சொல்லிக் கொண்டே போனாள் சிவகாமியம்மாள்.




கடைக்காரன் — இந்தக் கடிகாரம் ஒரு மனுஷ ஆயுசு காலத்துக்கு உழைக்கும், ஐயா!

வந்தவர் :— அப்படியானால் வேண்டாம். இப்போதே எனக்கு வயது அறுபது ஆகிவிட்டது!

# வாழ்வில் ஒளி

## எஸ். டி. ஸ்ரீநிவாஸன்

"விஜயா! ராத்திரி நான் வருவதற்கு நாழிகையாகும். நான் வரும் வரையில் அஞ்சலையை உனக்குத் துணைக்கு வைத்துக் கொள்!" என்று சொல்லிக் கொண்டே தன் சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பினான் கிருஷ்ணமூர்த்தி.

தெருக் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொள்வதற்காக அவன் பின்னால் சென்ற விஜயா, "முடிந்தால், பார்! முடியா விட்டால் நீ வீணுக்கு மனதைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாதே, அண்ணா! அப்புறம் நடக்கிறது நடக்கட்டும்......" என்றாள். ஆனால் தன் மனத்தில் உண்டாகியிருந்த வருத்தத்தின் காரணமாக அவள் முகத்தில் படர்ந்திருந்த சோகத் திரையை அவளால் மறைக்க முடியவில்லை.

"எப்படியும் காரியம் கைகூடும் என்ற நம்பிக்கை இருக்கிறது......நீ கவலைப் படாதே........." என்று அவளுக்குத் தைரியம் கூறிவிட்டுச் சைக்கிளின் மேல் ஏறிக் கிளம்பிவிட்டான் கிருஷ்ணமூர்த்தி.

கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்த விஜயாவின் கண்களில் மேஜையின் மேல் கிடந்த—தன்னை வருத்தத்துக்கும் தன் அண்ணனை இத்தனை அலைச்சலுக்கும் உள்ளாக்கிய — அந்தக் கடிதம் பட்டுவிட்டது.

மேஜையண்டை சென்று அதைக் கையில் எடுத்து மறுபடியும் ஒரு முறை படித்தாள்.

"என் தந்தை உன் அண்ணாவுக்கு எழுதிய கடிதம் கிடைத்திருக்கும் என்று நினைக்கிறேன். ஏன் இன்னும் பதில் வரவில்லை? என் தந்தையின் கடிதத்தில் கண்டுள்ளபடி உன் அண்ணாவிடமிருந்து ஐந்நூறு ரூபாய் வராமல் போனால் நீ இங்கு என்னுடன் குடித்தனம் செய்ய வரமுடியாது. என் தம்பியை 'எலக்ட்ரிகல் என்ஜினீயரிங் கோர்ஸி'ல் சேர்ப்பதற்காக இந்தப் பணம் அவசியமாகத் தேவைப்படுகிறது. உடனே பணத்தை அனுப்பச் சொல்—ராமகிருஷ்ணன்."

இதைப் படித்து முடித்ததும் அவள் இருதயம் ஒருமுறை விம்மத்தான் செய்தது.

'என்ன அநியாயம்! இவருடைய தம்பியின் படிப்புக்கு இங்கிருந்து பணம் பெற வேண்டுமாம்! அக்கிரமம்.........பணம் பிடுங்குவதற்குப் புதுப் புது வழியா?...... பாவம், அண்ணா பணத்திற்கு எங்கு போவான்? என் மாமனாரும் மாமியாரும் தான் 'பணம் பணம்' என்று உயிரை விடுகிறார்கள் என்றால் 'இவர்' கூடவா இங்கிருக்கும் நிலைமை அறிந்து கொள்ளவில்லை? தன் பணம், சுகம் எல்லாவற்றையும் நமக்காகத் தியாகம் செய்துவிட்டிருக்கும் அண்ணாவுக்கு மேல்மேலும் கஷ்டமே வந்து கொண்டிருக்கிறதே? அவன் இரண்டு நாளாகப் பணத்துக்கு எங்கெல்லாம் அலைகிறானோ?......யாரிடம் கேட்கிறானோ?......

'அவள் கண்களில் நீர் முத்துக்கள் கோத்து நின்றன. 'சட்'டென்று அவள் சிந்தனைக் கயிறு அறுந்தது. அகஸ்மாத்தாக அவள் கண்கள் மணக் கோலத்துடன் காட்சி யளித்த தன் அண்ணா - மன்னி இவர்களின் 'போட்டோ'வின் மேல் பதிந்தன. உடனே ஏதோ ஒரு புதிய உணர்ச்சியால் தாக்குண்டவள்போல் அவள் அந்தப் 'போட்டோ'வின் அருகில் ஓடினாள். வெறி பிடித்தவள் போல், "மன்னி! மன்னி!! இப்போது என் உள்ளம் தவிப்பதைப் போலத்தானே அன்று உன் மனம் தவித்திருக்கும்? என் கர்வத்தால் அப்போது நான் உன் மனத் தவிப்பை அறிந்து கொள்ளாமல் போய் விட்டேன். உன் வாழ்வைக் குட்டிச் சுவராக்கினேன்! அதன் பலன்தான் இப்போது நான் அவஸ்தைப் படுகிறேன். அந்தப் பாவம்தான் இப்போது என்னைச் சுற்றுகிறது. மன்னி! மன்னி!!......" என்று கத்தினாள்.

★

கிருஷ்ணமூர்த்திக்குத் தன் தங்கை விஜயாவிடம் அபார அன்பு. கிருஷ்ணமூர்த்தியின் தந்தை சிறு வயதிலேயே இறந்துவிட்டார். அவனுடைய தாயார் தான் அவனையும் விஜயாவையும் வளர்த்து வந்தாள்.

கிருஷ்ணமூர்த்தி 'ஹானர்ஸ்' பரீட்சையில் தேறியதும் அவனுக்கும் வாஸந்திக்கும் மணமாகியது. அப்போது விஜயாவுக்குப் பதினான்கு வயது.

வாஸந்தி நல்ல அழகி; எஸ். எஸ். எல். ஸி. வரையில் படித்திருந்தாள்.

கல்யாணமான சில மாதங்களுக்கெல்லாம் வாஸந்தியின் தந்தை அவனைக்

'கொண்டு விட' ஒரு நாள் குறித்து அனுப்பும்படி கிருஷ்ணமூர்த்திக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

அந்தக் கடிதம் வந்ததும் கிருஷ்ணமூர்த்தியின் தாயார், "கல்யாணத்தின் போதே, சொன்ன அளவுக்கு அவர்கள் 'சீர்' செய்யவில்லை; இப்போது எல்லாவற்றுக்கும் சேர்த்து நானூறு ரூபாய் கொடுப்பதாக இருந்தால்தான் பெண்ணைக் கொண்டு வந்து விடலாம் என்று எழுது" என்றாள்.

பக்கத்தில் இருந்த விஜயா, "ஏனம்மா! அறுநூறாகத்தான் அனுப்பும்படி எழுதச் சொல்லேன். எனக்கும் ரொம்ப நாளாக 'ஸ்வஸ்திக் செயின்' பண்ணிப் போடுகிறேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாய். அறுநூறு ரூபாய் சரியாக இருக்கும் அதற்கு!" என்றாள்

"சரி! அப்படியேதான் கடிதம் எழுதேன்!" என்றாள் கிருஷ்ணமூர்த்தியின் தாயார்.

கிருஷ்ணமூர்த்தி தாயாருக்கு அடங்கிய பிள்ளை. சுயமாக ஒன்றும் செய்யச் சுதந்திரம் இல்லாதவன். தன் தாயார் சொன்னபடியே தன் மாமனாருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டான். வாஸந்திக்கும் ஒரு தனிக் கடிதம் எழுதி, தன் தங்கையின் கழுத்தில் சங்கிலி ஏறினால்தான் அவள் தன்னுடன் குடித்தனம் செய்ய வர முடியும் என்பதைத் தெரியப்படுத்தினான்.

ஒரு வாரத்துக்குள் அவனுடைய ஆபீஸ் விலாசத்துக்கு வாஸந்தியிடமிருந்து பதில் வந்தது.

அன்று மாலை அவன் வீட்டுக்கு வந்த அரை மணி நேரத்துக்கெல்லாம் விஜயா தெருவில் பூ வாங்கிவிட்டு, பூக்காரனுக்குக் காசு கொடுப்பதற்காக அண்ணாவின் மணி பர்ஸை எடுத்தாள். சட்டைப் பையில் இருந்த வாஸந்தியின் கடிதம் அவள் கண்களில் பட்டுவிட்டது. பரபரப்புடன் அதை எடுத்துப் படித்தாள். அதைப் படித்ததும் அவளுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன. அவள் அக்கடிதத்தை எடுத்துக் கொண்டு தன் தாயாரிடம் ஓடினாள்; அதை அவளுக்குப் படித்துக் காண்பித்தாள். "....திடீரென்று அறுநூறு ரூபாய்க்கு எங்கே போவதென்று அப்பா விழிக்கிறார். அதுவும் தங்கள் உபயோகத்துக்கானால் பரவாயில்லை; அப்பாவிடமிருந்து வாங்கும் பணத்தைக் கொண்டு தாங்கள் தங்கள் தங்கைக்கு நகைசெய்து போடக்கூடாது என்று நான் சொல்லவில்லை; கொஞ்சம் பொறுத்துக் கொள்ளும்படித்தான் கேட்டுக் கொள்ளுகிறேன். இன்னும் இரண்டு மூன்று மாதங்களுக்குள் அறுநூறு ரூபாயைத் தங்களுக்கு அனுப்பி வைக்கிறேன் என்று அப்பா சொல்லுகிறார். இந்தச் சமயம், அப்பாவின் நிலைமை மனத்தில் கொண்டு, பெரிய மனசு பண்ணி என்னை அழைத்துக் கொள்ளுங்கள்—வாஸந்தி."

இதைப் படித்து முடித்ததும் விஜயா, "அண்ணாவுக்கு—ஆபீஸ் விலாசத்துக்கு—கடிதாசு எழுத அவளுக்கு எவ்வளவு தைரியம், பாரம்மா! நாம் அவர்களிடமிருந்து வாங்குகிற பணத்தைக்கொண்டு என்ன வேணுமானாலும் செய்து கொள்கிறோம். இவள் யார் கேட்கிறதற்கு?... என் பெயரை எதற்கு நடுவில் இழுக்க வேண்டும்?... அவள் பெரிய புனைச் சுருட்டுக்காரி. அவளைத் தள்ளிவைத்து விட்டு, அண்ணாவுக்கு வேறு கல்யாணம் பண்ணி வை, அம்மா!..." என்று கோபத்துடன் கத்தினாள்.

கிருஷ்ணமூர்த்தியின் தாயாரும் தன் பெண்ணுடன் சேர்ந்துகொண்டு தன் மாட்டுப் பெண்ணின்மேல் தன் முழுக் கோபத்தையும் காட்டினாள். கிருஷ்ணமூர்த்தியின் நிலைமை தர்ம சங்கடமாகப் போய்விட்டது.

நாட்கள் ஓடின; விஜயாவின் கோபமும் அவள் தாயாருடைய பிடிவாதமும் தணியவேயில்லை. வாஸந்தியைக் குடித்தனம் செய்ய அழைத்துக் கொள்ளவில்லை.

வாஸந்தி தன் மாமியாருக்கே—தன்னை மன்னித்து ஏற்றுக் கொள்ளும்படி—பல கடிதங்கள் எழுதினாள். ஆனால் பலன் ஒன்றும் இல்லை.

அடுத்த வருஷம் திடீரென்று கிருஷ்ணமூர்த்தியின் தாயார் இறந்து விட்டாள். இறக்கும்போது அவள் தன் பிள்ளையைப் பக்கத்தில் அழைத்து வைத்துக்கொண்டு, "விஜயாவின் மனம் கோணாதபடி நடந்து கொள்! அவளை ஒரு நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து கொடு. அவள் சந்தோஷமே உன் வாழ்க்கை

## பணத்தை எடுங்கள்

பையன்:—வைத்தியர் ஐயா, நான் உங்களிடம் ஒரு நோயாளியை அழைத்துக் கொண்டு வந்தால் நீங்கள் எனக்குக் கமிஷன் தருவீர்களா?

வைத்தியர்:—பேஷாய்த்தருவேன். எங்கே நோயாளி?

பையன்:—நீங்கள் முதலில் கமிஷன் பணத்தை எடுங்கள். நான் தான் நோயாளி!

இலக்ஷ்யமாக இருக்கவேணும்......" என்று சொல்லிவிட்டு இறந்தான்.

வாஸந்தியை அழைத்து வரவேண்டும் என்று கிருஷ்ணமூர்த்திக்கு மனம் துடித்தது; ஆனால் அவள் வந்தால் தன் தங்கைக்கும் அவளுக்கும் ஏற்கனவே இருக்கும் பகைமை இன்னும் முற்றிவிடும் என்று எண்ணிய அவன் தன் ஆவலை அடக்கிக்கொண்டு, தன் தாயாரின் வார்த்தைகளை நினைத்துக்கொண்டு பேசாமல் இருந்து விட்டான்.

அதே வருஷம் கிருஷ்ணமூர்த்தி மிகவும் சிரமப்பட்டு, விஜயாவுக்குப் பிடித்த ஒரு வரனைத் தேடி, அவளுக்கு மணம் செய்து வைத்தான். ஆனால் மிகவும் நல்லவர்களாகத் தோன்றிய சம்பந்தியும் மாப்பிள்ளையும், பிறகு 'பணம், பணம்' என்று பிடுங்க ஆரம்பித்து விட்டனர்.

★

எவ்வளவு முயன்றும் தனக்குப் பணம் கிடைக்கவில்லை என்ற பாட்டையே கிருஷ்ணமூர்த்தி பாடிக்கொண்டிருந்தான்.

"சரி! நாம் இனி கணவனிடம் போய் வசிக்க முடியாது! அதைப் பற்றிக் கோட்டை கட்டுவதில் பிரயோசனம் இல்லை..." என்று முடிவுக்கு வந்து விட்டாள் விஜயா.

அன்று மத்தியானம் மூன்று மணி இருக்கும். விஜயா காப்பி போட்டுக் கொண்டிருந்தாள். தெருக்கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. பரபரப்புடன் சென்று கதவைத் திறந்தாள் விஜயா. தெருவில் கிருஷ்ணமூர்த்தி நின்று கொண்டிருந்தான். அவன் பொதுவாக மாலை ஆறு மணிக்குப் பிறகுதான் ஆபீஸில் இருந்து வீட்டுக்கு வருவது வழக்கம். ஆனால் அன்று மூன்று மணிக்கே அவன் வந்து விட்டது அவளுக்கு மிகவும் ஆச்சரியத்தை அளித்தது.

உள்ளே வந்த அவன் தன் சட்டைப் பையில் இருந்து ஒரு கவரை எடுத்து விஜயாவிடம் நீட்டினான். அது அவன் ஆபீஸ் விலாசத்துக்கு வந்திருந்தது.

உள்ளேயிருந்த காகிதத்தை வெளியே எடுத்தான் அவன். காகிதத்துடன் ரூபாய் ஐந்நூறுக்கு ஒரு 'டிராப்'டும் இருந்தது. கடிதத்தைப் படித்த அவன் முகத்தில் ஆச்சரியமும் ஆனந்தமும் மாறி மாறித் தோன்றின.

"நமஸ்காரம். உங்கள் ஆபீஸில் என் தூரத்து உறவினர் ஒருவர் வேலை செய்கிறார். அவர் நேற்று இங்கு வந்திருந்தார். ஐந்நூறு ரூபாய் அனுப்பினா லொழிய விஜயாவின் கணவன் அவளைக் குடித்தனம் செய்ய அழைத்துக் கொள்ள முடியாதென்று உங்களுக்கு எழுதி இருப்பதாகவும், நீங்கள் பணத்திற்காக எங்கெங்கோ கஷ்டப்படுவதாகவும் அவர் சொன்னார். நான் ஆதி முதலே விஜயாவை என் சொந்தத் தங்கை மாதிரி பாவித்து வருகிறேன். தன் கணவன் தன்னைக் குடித்தனம் செய்ய அழைத்துக் கொள்ளவில்லையென்றால் ஒரு பெண்ணின் மனம் எவ்வளவு சங்கடப்படும் என்பதை என் போன்றவர்கள்தான் அறிய முடியும். விஜயாவின் சந்தோஷம்தான் என் சந்தோஷம். நான்கு வருஷங்களுக்கு முன்பு விஜயா ஏதோ சில நகைகளைச் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்ட போது, என்னால் அந்த ஆசையை நிறைவேற்றி வைக்க முடியவில்லை. ஆனால் அதைக் காட்டிலும் முக்கியமான ஒரு சந்தர்ப்பத்தில்—இப்போது—ஏதோ என்னாலான உதவியைச் செய்யக் கடவுள் எனக்கு ஒரு சக்தியைக் கொடுத்ததற்கு நான் சந்தோஷப் படுகிறேன். நான் ஒரு வருஷமாக ஒரு கம்பெனியில் 'டைபிஸ்'டாக இருக்கிறேன். என் சம்பளத்தில் நான் இதுவரை மிச்சம் பிடித்து வைத்திருந்த ஐந்நூறு ரூபாயை 'டிராப்டா'க இத்துடன் அனுப்புகிறேன். இதைப் பயன்படுத்திக் கொள்ளவும். எப்படியாவது விஜயா சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதே என் நோக்கம். தங்களுக்கு என் நமஸ்காரம். விஜயாவுக்கு என் ஆசீர்வாதம்—வாஸந்தி."

இதைப் படித்து முடித்த விஜயாவின் கண்களில் நீர் சுரந்தது.

அவள் சட்டென்று கிருஷ்ணமூர்த்தியின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "அண்ணா! நான் மன்னியைப் பற்றி இது வரை நினைத்ததெல்லாம் தவறு. அவள் ஒரு தெய்வப் பிறவி. அவளைப் போன்ற ஒருத்தியை இந்த உலகில் பார்ப்பது மிகவும் கடினம். அவள் வாழ்க்கையை வறண்ட பாலைவனமாக்கி விட்டேன்; அதைத் துளிக்கூட மனதில் வைத்துக் கொள்ளாமல், இப்போது என் வாழ்வில் ஒளியை உண்டாக்க வந்திருக்கிறாள் அவள். அண்ணா! இந்த ஐந்நூறு ரூபாயை மாப்பிள்ளைக்கு அனுப்பிவிட்டு நீ இன்று ராத்திரியே திருச்சிக்குப்போய் மன்னியை அழைத்துக் கொண்டு வரவேண்டும்..." என்றாள்.

அவள் முகமலர்ச்சியைக்கண்டு கிருஷ்ணமூர்த்தியின் முகமும் மலர்ந்தது; தான் வெகு சீக்கிரத்திலேயே வாஸந்தியை அழைத்து வந்து அவளுடன் இன்ப வாழ்வு நடத்தப் போகிறோம் என்ற எண்ணத்தில் அவன் அகமும் மலர்ந்தது.

# வட்ட மேஜை



## இரண்டணா உயர்வு

சாப்பாட்டு விடுதிகளில் சாப்பாடு ஒன்றுக்கு 2 அணா வீதம் உயர்த்த வேண்டும் என்று சென்னை அரசாங்கத்தார் கூறுகிறார்கள். இந்த அறிக்கைகளினால் கஷ்டப்படுகின்றவர்கள் யார்? சென்னை மந்திரிகளா அல்லது ஓட்டல் முதலாளிகளா? இருவரும் இல்லை. சொற்ப ஊதியம் பெற்று ஓட்டல்களை நம்பி வாழ்க்கை நடத்தும் ஏழை குமாஸ்தாக்களும் மற்றவர்களும்தான் என்பதை உணர வேண்டும். உணவு மந்திரி அவர்கள் ஓட்டல்களில் போடப்படும் உணவை ஒரு வேளையாவது சாப்பிட்டிருப்பாரா? அவர் ஏன் சாப்பிடப் போகிறார்? புளிச்ச ஏப்பக்காரனுக்குப் பசி ஏப்பக்காரனின் கஷ்டம் எங்கே தெரியப் போகிறது! தற்போது சாப்பாட்டு விடுதிகளில் போடப்படும் உணவை உணவு மந்திரி அவர்கள் ருசி பார்த்திருப்பாரேயானால், சாப்பாடு ஒன்றுக்கு 2 அணா வீதம் உயர்த்துவது அக்கிரமம் என்று மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளுவார்.

'சம்பளம் போதவில்லை; சம்பளம் அதிகம் வேண்டும்' என்று கேட்டால் 'வேலையை விட்டுப் போய் விடு!' என்று வாய் கூசாமல் சொல்லி விடுகிறார்கள் முதலாளிகள். இந்த நிலையில் சாப்பாட்டிற்கே முப்பது ரூபாய் கொடுத்து விட்டால் மற்றச் செலவுகளையும், தன் குடும்பத்தையும் எவ்விதம் காப்பாற்ற முடியும் என்பதைச் சென்னை அரசாங்கம் அறியுமா? அல்லது ஓட்டல் முதலாளிகள்தான் உணர்வார்களா? அரசாங்கத்தின் அறிக்கை ஓட்டல் முதலாளிகளுக்கு மேலும் சுரண்டுவதற்கு வழி காட்டுகிறதே அல்லாமல், ஏழை குமாஸ்தாக்களின் பரிதாப நிலைக்காகப் பச்சாதாபப்படுவதாகத் தெரியவில்லை.

சென்னை
30—12—50 பி. எஸ். சந்திரசேகரன்

○●○

## அப்பன் சாமிக்கும் 6 அவுன்ஸ் ரேஷன்

1948ம் வருஷத்திற்கும், 1950-ம் வருஷத்திற்கும் இடையில் எவ்வளவோ மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. உடையில், உற்பத்தியில், உழைப்பில், உபாசிப்பில், உணவில், எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. 1949-ல் கைத்தறி நெசவாளருக்கு ஓரளவு நூல் கிடைத்து வந்தது. 1950-ல் கைத்தறி நெசவாளர்கள், பட்டினி ஊர்வலம் வருகிறார்கள். 1949-ல் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காகப் பெரிய திட்டங்கள் வகுத்து 1951க்கு மேல், வெளிநாட்டிலிருந்து உணவு இறக்குமதி செய்யக் கூடாது என்று முடிவு கட்டினார்கள். உணவு உற்பத்திக்காக, கிணற்றுத் தாசில்தார், உரம் தாசில்தார், கலப்பைத் தாசில்தார், விதைத் தாசில்தார் என்றெல்லாம் விதவிதமான அதிகாரிகளை நியமித்தார்கள். கிணற்றுக்காக கிடைத்த ரூபாயைக் கொண்டு பழைய கிணறுகளை வெள்ளையடித்துப் பூசி விட்டார்கள். உணவு உற்பத்திப் பெருக்குப் பிரசாரகர்கள், வாயாலே உழுது, வாயாலே உரம் போட்டு, வாயாலே விதைத்துக் களை பிடுங்கி, அறுத்து ஒலிபெருக்கி என்ற களத்திலே நெல்லைக் குவித்து விட்டார்கள். இன்று ஆகாயக் கப்பலிலே பறந்து செல்ல போக்கியதையுள்ள காங்கிரஸ்காரர்கள், ஒரு காலத்தில் கால்நடையாக நடந்து, தண்டோரா அடித்து, கையில் கொடி பிடித்து, கஷ்டப்பட்டு உழைத்ததால்தான், 'கண்ணிய மானவர்கள், பிறருக்காக வாழுகிற புண்ணிய மூர்த்திகள்' என்று பொது மக்கள் அவர்களைப் புகழ்ந்தார்கள். மாலை சூட்டி மகிழ்ந்தார்கள். ஆரத்தி எடுத்து ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். 1949-ம் வருஷம் வரைகூட இப்படி நடந்தது.

இப்பொழுது என்னடாவென்றால் கட்டை வண்டியில் போக லாயக்கில்லாதவர்கள், காரில் போனவர்கள் தண்டோரா அடிக்க வேண்டுமானாலும் அவர்களுக்கு மோட்டார் கார் வேண்டியிருக்கிறது; கார் கதவைத் திறந்து பிடித்துக்கொள்ள தொண்டன் வேண்டியிருக்கிறது; கொடியைத் தாங்கிச் செல்ல 'ஜீப்' கார் தேவையாயிருக்கிறது.

சுதந்திரத்திற்குப் பிறகுதான் காங்கிரஸ்காரர்களுக்கு அதிக வேலையிருக்கிறது என்று காக்கஜீ சொன்னார். ஆனால் இப்பொழுது நடப்பதென்ன! தாசில்தாரிடம் போய் ரேஷன் கடைக்குச் சிபார்சு செய்வது நிர்மாணத் திட்டம் நெ. 1 என்றும், மூட்டைக்கு 4 படி நெல்லைத் திருடுவது நிர்மாணத் திட்டம் நெ. 2 என்றும், கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சுவது நிர்மாணத் திட்டம் நெ. 3 என்றும், கையால் நெய்த கதர் ஆடையை, மந்திரியையும், அதிகாரிகளையும் பார்க்கச் செல்லும் பொழுது மட்டும் உடுத்திக்கொண்டு, மற்ற நேரங்களில் 'மல்' துணியை உடுப்பது நிர்மாண திட்டம் நெ. 4 என்றும், கள்ள மார்க்கெட் செய்வது அல்லது செய்தவர்களை விடுதலை செய்ய ஏற்பாடு செய்வது நிர்மாணத் திட்டம் நெ. 5 என்றும் இப்படியாகப் பழைய 18 நிர்மாணத் திட்டங்களையும் மாற்றியிருக்கிறார்கள். இதே 1950ல் தான் 16 அவுன்ஸாக இருந்த ரேஷன் அரிசியின் அளவு 6 அவுன்ஸாக வளர்ச்சியடைந்தது!

1949-ம் வருஷம் வரை திருச்செந்தூரில் ஒரு அவுன்ஸ் [illegible] மைனர் என்று சொல்வார்கள். காலணாவுக்கு ஒரு சொப்பு, காலணாவுக்குச் சந்தனத் திலகம், காலணாவுக்குச் சோற்றுக் கட்டி! விபூதியும் குங்குமமும் முருகன் சந்நிதியில் இனாமாக எடுத்துக் கொள்ளலாம். இப்

பொழுது இந்தக் கட்டி ஒன்று நான்கணாவுக்குக்கூடக் கள்ள மார்க்கட்டில் கிடைப்பதில்லை. முருகனுக்கும் அளவுச் சாப்பாட்டில் 6 அவுன்ஸ் ஆக்கி விட்டார்கள் என்று சுப்பிரமணிய ஸ்வாமி கோவிலில் பூ வியாபாரம் செய்து காலத்தைக் கழிக்கும் ஓதுவார் ஒருவர் என்னை அடிக்காமல், என்மீது கல்லை வீசாமல், மண் அபிஷேகம் பண்ணாமல், வாயினால் அர்ச்சனை செய்து விட்டுப் போனார். அப்பன் சாமிக்கும் 6 அவுன்ஸ் ரேஷன் ஆக்கின அக்கிரமத்தைப் பற்றிப் பேசாத ஏழைகளை கிடையாது.

பாளையங்கோட்டை
28—12—50 எம். ஆர். மேகநாதன்

○●○

## நாவலும் நாடகமும்

சமீபத்தில் புனாவில் 'பார்த்திபன் கனவு' என்னும் நாவலை நாடகமாக நடிக்க ஏற்பாடுகள் நடந்து வருவது அறிந்ததும் எனக்கு ஒருபுறம் சந்தோஷமாகவும் மறுபுறம் பயமாகவும் இருந்தது. நாடகம் நடக்கப் போவது அறிந்து உள்ளுறச் சந்தோஷமடைந்தேன். ஆனால்......'அமெச்சூர் நாடக நடிகர்கள்' நடிப்பில் பல குறைகள் இருக்குமாகையால் 'பார்த்திபன் கன'வை வெற்றிகரமாக நடத்த முடியுமா என்ற பயம் உண்டாகியது.

சென்ற வாரம் 'கிறிஸ்துமஸ்' காரணமாக பம்பாயில் மூன்று தினங்கள் லீவு கிடைத்ததும் அளவற்ற மகிழ்ச்சியுடன் புனாவிற்குச் சென்றேன். பார்த்திபன் கனவு நாடகத்தைப் பார்த்தேன்.

நாடகம் மிக மிகச் சிறந்த முறையில் நடத்தப்பட்டது. முதல் காட்சி முதல் கடைசி வரை 700 ரஸிகர்கள் உற்சாகத்துடன் பார்த்தார்கள். நாடகம் ஐந்தரை மணி நேரம் நடந்தது. வேஷப் பொருத்தம் பிரமாதம். தங்கள் 'கல்கி'யில் வந்த படங்களைப் போலவே வேஷங்களை அமைத்திருந்தார்கள். நடிகர்களைப் பொறுக்கி யெடுத்தவர்களை மிகவும் பாராட்ட வேண்டும். மாமல்லராக நடித்தவரைத் தவிர மற்ற அனைவரும் மிகச் சிறப்பாக நடித்தார்கள் என்பதே சபையோர்களின் ஒரு முகமான அபிப்பிராயம். குந்தவியாக நடித்த சிறுவனும், விக்கிரமனாகத் தோன்றிய இளைஞனும், பொன்னன், வள்ளி, மாரப்பன், சிறுத் தொண்டர், அருள்மொழி, பார்த்திபன் ஆகிய அனைவரும் நடிப்பில் முதல் மார்க்கு வாங்கி விட்டார்கள்! நான் புனாவிற்குப் புதியவன் ஆகையால் அவர்கள் அனைவருடைய பெயரையும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

மற்றொரு சிறந்த அம்சம் காட்சி ஜோடனைகள். கலைக்கழகத்தார் இதற்காகக் குறைந்த பட்சம் ஆறுமாத காலமாகப் பாடுபட்டிருக்க வேண்டும். சித்திரமண்டபத்தில் பல பெரிய சித்திரங்களையும், மாமல்லபுரத்தையும் காஞ்சியையும் தயாரித்தவரை அறிமுகம் செய்து கொண்டு பாராட்டாமல் பம்பாய் திரும்ப எனக்கு மனமில்லை. சிரமத்துடன் அந்த அடக்கமான மனிதரைக் கண்டு பிடித்து மனமாரப் பாராட்டினேன்.

சிறுவன் விக்கிரமன் சபையில் மன்னிப்புக் கேட்க மறுக்கும் போதும், பின்னால் குந்தவி பொன்னனிடம் 'நான் எவ்வளவுதான் சோழ ராஜகுமாரனைக் காதலித்த போதிலும் அவரை மன்னித்து விடுவிக்கும்படி என் தந்தையிடம் கேட்டுச் சோழ வம்சத்திற்கே அவமானம் ஏற்படுத்த மாட்டேன்' என்று சொல்லிய கட்டத்திலும் சபையோருக்கு ரோமாஞ்சனம் உண்டாகியது!

இந்தச் சிறந்த நாடகத்தை நடத்தி வெற்றி பெற்ற புனா கழகத்தாரை பாராட்டுகிறேன்.

ஒரு எதிர்பாராத ஹாஸ்யம்:—ஒரு நடிகர் தவறுதலாக ஒரு வார்த்தையைச் சொல்லி விட்டார். உடனே 'I mean' என்று ஆங்கிலத்தில் கூறிவிட்டுச் சரியான சம்பாஷணையைத் துவக்கினார். ஆனால் அச்சிறு தவறைக்கூடச் சபையோர்கள் கவனித்துக் 'குபீர்' என்று சிரித்தார்கள்! இதை எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால் நாடகம் பார்த்தவர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்தார்கள் என்பதை அறிவிக்கவே.

பம்பாய்
28—12—50 வி. எஸ். ஸ்ரீனிவாசன்

## ஓ, அப்படியா!

ஹெட்கிளார்க் (கோபத்துடன்):- என்ன நீங்கள் ஒரு மாதகாலமாகத் தினமும் நேரங்கழித்து வருகிறீர்களே?

குமாஸ்தா:- ஆமாம் ஸார்! ஆனால் நான் தினமும் வெகு சீக்கிரமே திரும்பிப் போய் விடுகிறேன் என்பதை நீங்கள் ஞாபகப் படுத்திக் கொள்ள வேண்டும்!

○●○

## புனா கலைக் கழகம்

சென்ற 25-ம் தேதி திங்கட்கிழமை ஓர் அற்புத நாடகம் அரங்கேற்றப் பட்டது. நாடகத்தைப் பார்ப்பதற்குமுன் தொடர் கதையாகவோ, புத்தக மூலமாகவோ கதையைப் படித்த பல அறிஞர்கள் இம்மாதிரியான ஓர் சரித்திர சம்பந்தப்பட்ட கதையை நடிப்பது என்பது இயலாத காரியம் என்றும், அப்படி நாடகத்தை ஒரு விதமாக நடிக்க முடைன்றாலும் படுதோல்விதான் ஏற்படும் என்றும் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள். ஆகா! என்ன மாறுதல்! என்ன ஏமாற்றம்! நாடகத்தை ஐந்தரை மணி நேரம் கண் கொட்டாமல் தங்களையே மறந்து பார்த்து அனுபவித்து அர்த்த ராத்திரி பன்னிரண்டு மணிக்கு வீடு திரும்பினார்கள்.

"நாடகம் நாம் எதிர்பார்த்ததற்கு மேல் ரொம்ப நன்றாக இருந்தது. அந்தக் குந்தவி ரொம்ப அழகாக நடித்தாள். அடாடா! ஒவ்வொருவரும் என்ன அழகாக மேடையின் மீது

கடித்தார்கள் என்ற தமிழ்ப் பேச்சுதான் எங்கும் நிசப்தமான நள்ளிரவிலே பூனாவின் வீதிகளிலே ஒலித்தது. ****

பூனா
1—1—1951 கண்ணன்

[பம்பாய், பூனா நேயர்கள் இது போன்ற இன்னும் உற்சாகமான கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்களுடைய மகிழ்ச்சியை நாமும் பகிர்ந்து அநுபவிக்கிறோம்.
— ஆசிரியர்.]

○●○

## காலராவும் காப்பியும்

1943-ம் வருடத்தில் நான் எட்டாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபொழுது செஞ்சிலுவைச் சங்கத்தின் தலைவராகவும் இருந்தேன். அப்போது ஊரெங்கும் காலராவாக இருந்தது. நான் இருந்த கிராமத்தில் இருபத்தைந்து பேர் மாண்டார்கள். மாண்டவரை எடுத்துப் புதைக்கவோ வியாதி கண்டவர்களைக் கவனிக்கவோ யாரும் இல்லை. எல்லோரும் அவர் அவர்களை அந்த அந்த இடங்களிலேயே போட்டு விட்டு ஓடிப்போய் விட்டார்கள். சகோதரன் தாய் தந்தையர், சகோதரி யாரானாலும் சரி, பாராமல் ஓடி ஒளிந்து கொண்டார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் கிராம ஆஸ்பத்திரியில் இருந்த டாக்டரும்கூடப் பயந்து ஓடி விட்டார்.

நானும் ஆஸ்பத்திரியில் இருந்த கம்பவுண்டரும் சேர்ந்து டாக்டர் கொடுக்கும் மருந்துகளைக் கொடுத்து வீடு வீடாகச் சென்று பார்வையிட்டோம். சிலர் வியாதி கண்டவர்களை வீட்டில் வைத்துப் பூட்டி விட்டு ஓடிப் போயிருந்தார்கள். அவர்களுக்கும் சிகிச்சை செய்தோம். ஆனால் டாக்டர் கொடுத்த மருந்தில் குணப்படவில்லை. நூற்றுக்குப் பத்து பேர் தான் பிழைத்தார்கள். ஆனால் எனது சொந்த அநுபவத்தில் கைகண்ட மருந்து ஒன்று கொடுத்தேன். கொடுக்கப்பட்டவர்கள் அனைவரும் சுகமடைந்தார்கள். பெரிய கடுமையான மருந்து அல்ல. சாதாரணமாக நாம் சாப்பிடும் திரவ பதார்த்தம்தான். இதன் விதியைக் கவனியுங்கள்.

நாம் காப்பி சாப்பிடும் கப் ஒன்றை எடுத்து சுடு ஜலத்தில் நன்றாகச் சுத்தம் செய்து அரைக் கரண்டி (மேஜைக்கரண்டி) சுத்தமான காப்பிப் பவுடரைப் போட்டு நன்றாகக் கொதிக்கும் ஜலத்தை அத்துடன் அதன் மட்டத்திற்கு விட்டு மூடிவிட வேண்டும். 15 நிமிஷத்துக்குப் பிறகு அதை எடுத்துப் பார்த்தால் காப்பிப் பவுடரை அமிழ்த்த தண்ணீர் காணலாம். அந்த ஜலத்தை மற்ற பாத்திரத்தில் எடுத்து அத்துடன் ஒரு நல்ல எலுமிச்சம் (தேசிக்காய்) பழச்சாற்றை விட்டுக் கொடுக்க வேண்டும். அரை மணி நேரத்துக்குள் மலத்தையும் வாந்தியையும் நிறுத்திவிடும். ஆகாரம் 'ரஸ்க்' என்று சொல்லப்படும் டோஸ்ட் பண்ணிய ரொட்டி சாப்பிடலாம். பத்தியம் கிடையாது. இவ்விதம் மூன்று வேளை சாப்பிட வேண்டும்.

முக்கியமாகச் சிலருக்கு இந்த வியாதி பயத்தினால் உண்டாவதும் உண்டு. காலரா கண்டவர்களுடைய உடல் குளிர்ந்து தளர்ச்சி அடைந்தவுடன், அவர்களைச் செத்துப் போய் விட்டார்கள் என்று புதைப்பதும் நடந்து வருகிறது. அவர்கள் தண்ணீர் கேட்டால் கொடுக்க வேண்டும். உடலுக்குத் தவிடு வறுத்து ஒத்தடம் கொடுக்க வேண்டும். இரு தினங்களுக்குள் நல்ல சுகம் அடைவார்கள்.

கொழும்பு
28—12—50 எஸ். தேவிஸ்

○●○

## தமிழ் கூறும் நல்லுலகம்

இவ்வாண்டுக் 'கல்கி' தீபாவளி மலரின் சமர்ப்பண ஆரம்பத்திலே தாங்கள், "தமிழ் கூறும் நல்லுலகத்தின் திருக்கரங்களில் இந்தத் தலைசிறந்த மலரைச் சமர்ப்பித்து விட்டு......" என ஆரம்பித்துப் பின்னர், தொல்காப்பியர் காலத்தில் தமிழ் கூறும் நல்லுலகம் வடவேங்கடம் முதல் தென்குமரி வரை பரந்திருந்ததாகவும், ஆனால் இப்போதோ அது வடக்கே புதுடில்லியிலிருந்து தெற்கே திரிகோணமலை வரை பரந்து கிடக்கின்றது எனவும் தமிழ் கூறும் நல்லுலகத்தின் எல்லையைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். ஆனால் தங்களின் இவ்வெல்லை வகுப்பு ஆயிரக்கணக்கான அசல் தமிழரை வெளியே தள்ளி விட்டிருக்கின்றது; அதிலும் சுத்தமான, நூறுவீதச் செந்தமிழ் பேசும் தமிழ் மக்கள் வாழும் பகுதிகளைத் துண்டித்து விட்டிருக்கின்றது. திரிகோணமலையைப் பற்றியும் அதன் தமிழரைப் பற்றியும் குறிப்பிட்டிருந்த தாங்கள், திரிகோணமலைக்குத் தெற்கே பல மைல்களுக் கப்பாலிருக்கும் மட்டக்களப்பையும், இன்னும் அதற்குத் தெற்கேயும் வடக்கேயும் பல மைல்களுக் கப்பாலுள்ள தமிழர் வதியும் பிரதேசங்களையும் விட்டுவிட்டது அதிசயமானதுதான். இப்பகுதிகளில் வாழும் தமிழறிஞர்களுடன் உள்ள தொடர்புக் குறைவினால் ஏற்பட்ட வினைவாயிருக்கலாம். தமிழிசைக்கே ஒரு பொக்கிஷமான 'யாழ்நூலை' அருளிய சுவாமி விபுலானந்தரை நினைவு கூறும் போது, அவர் பிறந்த காரைத்தீவின் நினைவு வந்திருக்கலாமே! அது மட்டக்களப்புக்குத் தெற்கே இருபத்தைந்து மைல்களுக் கப்பாலுள்ள சுத்தத் தமிழூரல்லவா!

இனிமேல் தாங்கள் 'புதுடில்லியிலிருந்து இலங்கை வரை' என்று 'தமிழ்...உலக'த்தின் எல்லையை விரிவுறச் செய்யலாம். ஏனென்றால், தாங்கள் 'புதுடில்லியிலிருந்து மட்டக்களப்பு வரை' என்றெழுதினாலும், இலங்கையின் தென்பாகத்தே—அதாவது அம்பாந்தோட்டை மாத்தறைப் பகுதிகளில் வசிக்கும் தமிழர்கள் சேர்த்துகொண்டு தங்களுக்கு இதைப்பற்றி எழுத விழையலா மல்லவா!

ஆம், "தமிழ் கூறும் நல்லுலகம் மிகப் பொல்லாத உலகம்" என்று தாங்கள் குறிப்பிட்டிருந்தது முற்றிலும் உண்மையேதான்!

மட்டக்களப்பு,
இலங்கை
25-12-50 'கல்கி' நேயர்கள்

# புல்லாக்கு

வ. சா. நாகராஜன்

எழும்பூர் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் காலை ஏழு மணியாகிருந்து ரகுநாதன் காத்துக் கொண்டிருந்தான். ஏழரை மணிக்கு வந்து சேர்ந்திருக்கவேண்டிய போட் மெயில் மணி ஏழே முக்கால் ஆகியும் வந்து சேரவில்லை.

ரகுநாதனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. கால் மணி என்பதற்குப் பதிலாக்கு நிமிஷம் என்று எந்த மடையன் வைத்தான் என்று நினைத்தான். நேரத்தைச் செலவிட முடியாமல் ஸ்டேஷனுக்கு எதிரில் இருந்த ஹோட்டலில் மூன்று தடவைகள் காப்பி சாப்பிட்டான். காலையில் வாங்கிய பத்திரிகையை மனத்தில் விஷயம் பதியாமலே மூன்று தடவைகள் படித்து முடித்தான்.

அப்பாடா! கடைசியில் ஒரு வழியாக போட் மெயிலின் எஞ்சின் அவன் கண்களுக்குத் தெரிந்தது. எஞ்சினைப் போல அடித்துக் கொள்ளும் மார்பை அழுத்திப் பிடித்தவாறே கண்களிலிருந்து விழி பிதுங்கி விழும்படி ஒவ்வொரு வண்டியாகப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

கடைசியில் தங்க வளையல் அணிந்த கை ஒன்று அவன் இருந்த இடத்தை நோக்கித் திருப்பியதைப் பார்த்து அந்த வண்டியை நோக்கி ஓடினான் ரகுநாதன்.

ஜானகி — ரகுநாதனுடைய மனைவி — அந்த வண்டியிலிருந்து இறங்கினாள். சுற்றிலும் இருப்பவர்களைக்கூட மறந்து ரகுநாதன் ஜானகியையே பார்த்துக் கொண்டிருந்தான். "என்ன மாப்பிள்ளை, வீட்டில் எல்லோரும் சௌக்கியமா?" என்ற மாமனாரின் குரல் கேட்டவுடன், முகத்தில் வழிந்த அசட்டுத் தனத்தை மறைத்துக் கொண்டு அவரை வரவேற்றான்.

ஸ்டேஷன் பிளாட்பாரத்தை விட்டு நகர்ந்ததும் ஜானகியையும் மாமனாரையும் ஒரு டாக்ஸியில் ஏற்றி விட்டு, அவன் மோட்டார் ஸைக்கிளில் ஏறிக் கொண்டு டாக்ஸியின் முன்னால் சென்றான்.

அவன் மனம் நிறைந்த ஆனந்தத்தினால் ததும்பிக் கொண்டிருந்தது. ஜானகி அசாதாரணமான அழகி. தங்க நிறமுடைய அவள் உடம்பில் தங்க நகைகள் கூடக் கண்ணுக்குத் தென்படாது. மோட்டார் ஸைக்கிளின் வேகத்தைச் சற்றுக் குறைத்துத் திரும்பி டாக்ஸியை நோக்கினான் ரகுநாதன். ஜானகியும் மோட்டார் ஸைக்கிளில் செல்லும் தன் கணவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்தவுடன் அவன் சிரித்துக் கொண்டான். 'அழகாக இருந்தாலும் பட்டிக்காடு! அவளைச் சீர்திருத்தியாக வேண்டும். இந்த 1951-ம் வருஷத்தில் மூக்கில் புல்லாக்கு என்ன வேண்டியிருக்கிறது? பாவம், அவளுக்குப் பட்டணத்து நாகரிகம் தெரியாது. வீட்டுக்குப் போனதும் அவளிடம் சொல்ல வேண்டும்' என்று நினைத்தான் ரகுநாதன்.

ஜானகி ரகுநாதனுடைய வீட்டுக்கு வந்ததிலிருந்து தன் மூக்கில் இருந்த வைர புல்லாக்கைச் சதா துடைத்து விட்டுக் கொண்டிருந்தாள். ரகுநாதன் முன்பு நடமாடினாள். ரகுநாதனுக்கோ அவள் இந்த மாதிரி ஒரு புல்லாக்கைப் போட்டுக் கொண்டிருப்பது பிடிக்க வில்லை. 'அவளை இதற்குள்ளேயே கேட்கக் கூடாது. மாமனார் ஊருக்குப் போகட்டும்' என்று இரண்டு நாட்களைத் தள்ளினான்.

மூன்றாவது நாள் மாமனார் ஊருக்குப் போனபிறகு ரகுநாதன் ஜானகியிடம் மெள்ளச் சொன்னான். "ஜானகி! நீ ரொம்ப அழகாகத்தான் இருக்கிறாய். ஆனால் இந்தப் புல்லாக்கு என்னத்துக்கு?......" என்று ஆரம்பித்து மென்று விழுங்கினான்.

"ஏன், இது நன்றாக இல்லையா?" என்று கேட்டவாறே ஜானகி அதைத் துடைத்தாள்.

"நன்றாயில்லை என்று நான் சொல்லுவேனா? இந்தப் பட்டணத்துக்காரர்களுக்குப் புல்லாக்கு அழகை எல்லாம் ரஸிக்கத் தெரியாது அதனால்தான் சொன்னேன். இந்தப் புல்லாக்கு இல்லாமலே தான் நீ நன்றாயிருக்கிறாயே!" என்றான் ரகுநாதன்.

ஆனால் ஜானகி புல்லாக்கைக் கழற்றுவதற்குச் சம்மதிக்கவில்லை. "இது எங்கள் பாட்டி காலிலிருந்து இருக்கிறது. எங்கள் அம்மா இதைப் போட்டுக்கொண்டதனாலேயே குழந்தையும் குட்டியும் பெற்றுக் கொண்டு சௌகரியமாக இருந்தாளாம். ஆகவேதான் இதை எனக்குப் போட்டிருக்கிறேன்" என்றாள்.

ரகுநாதனுக்கு இந்தப் பாட்டிக் கதை ஆத்திரமூட்டியது. ஜானகி வீட்டுக்கு வந்து நான்கு நாட்கள் ஆகியும் அவளைப்



சின்னப் பையன் (டெலிபோனில் தன் நண்பனிடம்):—ராஜு! நேற்று வாத்தியார் கொடுத்த வீட்டுக் கணக்குக்கு உங்கள் தாத்தாவின் விடை என்ன?

பீச்சுக்கோ சினிமாவுக்கோ அழைத்துக் கொண்டு போக முடியவில்லையே என்று ஏங்கினான். 'இந்தமாதிரி பழங்கால 'பாஷ'னில் புல்லாக்கைப் போட்டுக் கொண்டிருக்கும் பெண்ணை எப்படிப் பீச்சுக்கு அழைத்துக் கொண்டு போவது? எல்லாரும் கையைக் கொட்டிச் சிரிக்க மாட்டார்களா?' என்று நினைத்தான்.

இந்த விஷயத்தில் ஜானகி அசட்டுப் பிடிவாதம் பிடிப்பது அவனுக்கு ஆத்திரத்தை இன்னும் அதிகமாக்கியது. ஜானகியைத் தன் வழிக்குக் கொண்டு வர ஏதாவது உபாயம் இருக்கிறதா என்று மூளையைச் செலவிடலானான்.

அன்று வெள்ளிக்கிழமை. ரகுநாதன் சாப்பிட்டுவிட்டு முன் ஹாலுக்கு வந்த போது அவனுக்கு வேண்டிய உடுப்புகளை ஜானகி எடுத்து வைத்திருக்கவில்லை. "ஜானகி எங்கே, அம்மா?" என்று கத்தினான், அம்மாவை நோக்கி.

"அவள் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்கிறாள். இன்றைக்கு நீயேதான் பீரோவைத் திறந்து உனக்கு வேண்டிய சட்டை துணிமணிகளை எடுத்துக் கொள்ளேன்!" என்றாள் அவனுடைய அம்மா.

ரகுநாதனுக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. பீரோவைத் திறந்தான். ஒரு வெள்ளிக் கிண்ணத்தில் அவள் தன் நகைகளைக் கழற்றி வைத்திருந்தாள். அவற்றை அவன் ஒவ்வொன்றாகப் பார்வையிட்டான். அவன் வெறுத்து வந்த புல்லாக்கு அவன் கண்களில் பட்டது. உடனே அதை எடுத்துக் கோட்டுப் பையில் போட்டுக்கொண்டு ஆபீஸுக்குப் போய் விட்டான்.

* * *

சாயங்காலம் ஆயிற்று. 'இன்று ஜானகி புல்லாக்கு இல்லாமல் சாதாரணமாக பட்டணத்துப் பெண்மாதிரி இருப்பாள். அவளை இன்றைக்குப் பீச்சுக்கு அழைத்துக்கொண்டு போகலாம்' என்று எண்ணமிட்டவாறே அவன் வீட்டுக்குப் புறப்பட்டான். வழி நெடுக, 'புல்லாக்கை எங்கே காணோம்?' என்று அவள் கேட்டால் என்ன பதில் சொல்வது என்ற யோசனை அவனை விட்டு அகலவில்லை.

வீட்டுக்கு வந்ததும் அவன் சட்டையைக் கூடக் கழற்றவில்லை. அதற்குள்ளாக ஜானகி அவன் எதிரில் வந்து நின்றாள். "காலையில் பீரோவைத் திறக்கும்போது வெள்ளிக் கிண்ணத்தில் புல்லாக்கு இருந்ததே, பார்த்தீர்களா?" என்றும் கேட்டு விட்டாள்.

"உம்...பார்த்தேன். என் சிநேகிதன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு எங்கேயோ கல்யாணத்துக்குப் போகப் போகிறானாம். அதற்காகப் புல்லாக்கைக் கொஞ்சம் கேட்டான். கொடுத்திருக்கிறேன்" என்று புளுகினான் ரகுநாதன்.

அவன் எதிர்பார்த்தபடி ஜானகி 'ரகளை' ஒன்றும் செய்யவில்லை. அவனும் முகத்தை அலம்பப் பின் கட்டுக்குச் சென்றான்.

வழக்கத்துக்கு விரோதமாகத் தன் தகப்பனாரிடமிருந்து ஏதாவது கடிதம் ரகுநாதனுடைய ஆபீஸ் விலாசத்துக்கு வந்திருக்கிறதா என்று பார்ப்பதற்காக, அவனுடைய கோட்டுப் பைக்குள் கையை விட்ட ஜானகியின் விரல்களில் புல்லாக்குத் தட்டுப் பட்டது. ஆச்சரியத்துடன் அதை எடுத்துப் பார்த்த ஜானகி, 'தன்னிடம் வேண்டுமென்றே பொய் சொன்ன கணவன் மீது ஒரு பொய்க் கோபம் கோபித்துக் கொண்டு புல்லாக்குடன் வெளியேறினாள்.

அன்று ராத்திரி ரகுநாதன் சாப்பிடும் போது ஜானகி அவன் கண்களில் தட்டுப் படவே இல்லை. ராத்திரி அவன் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்த போது ஜானகி வந்தாள். ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்த ரகுநாதன் அவள் முகத்துக்கு ஒளி ஊட்டிய புல்லாக்கைக் கண்டு திடுக்கிட்டான்.

"இது ஏது ஜானகி?" என்று கேட்டான், ஆச்சரியத்துடன்.

"அவர்" தன் சிநேகிதரின் மனைவிக்காக உன் புல்லாக்கை இரண்டு மூன்று நாட்கள் கடன் கொடுத்தால் அதுவரை போட்டுக் கொள்வதற்கு இதையும் வைத்துக் கொள்' என்று சொல்லி இன்னொரு புல்லாக்கையும் என் அம்மா எனக்குக் கொடுத்திருந்தாள்" என்று பெரிய பொய் ஒன்றைத் தைரியத்துடன் சொன்னாள் ஜானகி.

அடி வயிற்றிலிருந்து எழுந்த ஏமாற்றத்துடன் ரகுநாதன் எழுந்து கோட்டுப்

பைக்குள் கையை விட்டுத் துழாவினான். அவனைப்பார்த்துச் சிரித்த ஜானகியின் கன்னத்தை அப்பொழுது செல்லமாகத் தட்டத்தான் அவனால் முடிந்தது!

*   *   *

ஒரு மாதம் ஆயிற்று. ரகுநாதன் ஜானகியை அழைத்துக் கொண்டு ஒரு நாள் கூடப் பீச்சுக்குப் போகவில்லை. ஒரு நாள் கூடச் சினிமாவுக்குப் போகவில்லை. புல்லாக்குப் போட்டுக் கொண்டிருக்கும் பெண்ணுடன் எப்படிப் போவது?

முதலில் சாதாரணமாகச் சொல்லிப் பார்த்தான். பிறகு கோபிக்கவும் கோபித்துக் கொண்டான். ஆனால் கிராமத்துப் பெண்ணான ஜானகி, தன் மூக்கிலிருந்து. அந்த 'அதிர்ஷ்டப்' புல்லாக்கைக் கழற்றச் சம்மதிக்கவே இல்லை

ஒருநாள் ஆபீஸிலிருந்து திரும்பி வரும் போது மயிலாப்பூரில் இருந்த தன் மூத்த சகோதரியின் பெண் ராஜியை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தான். சாயங்காலம் ஆனதும் ஜானகியையும் ராஜியையும் அழைத்துக் கொண்டு பீச்சுக்குக் கிளம்பினான். பஸ்ஸில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது கூட அங்கே இருந்தவர்கள் எல்லோரும் புல்லாக்குப் போட்டுக்கொண்டிருக்கும் ஜானகியையே பார்ப்பது போல் இருந்தது அவனுக்கு. ஜானகியோ அதைக் கவனிக்காமல் ராஜியுடன் ஏதோ பேசிக் கொண்டே இருந்தாள்.

பீச்சில் யாரும் இல்லாத இடமாகப் பார்த்து ஜானகியையும் ராஜியையும் அழைத்துக் கொண்டு போய் உட்கார்ந்தான். ஜானகி ஒரு நிமிஷம்கூட விடாமல் ராஜியுடன் பேசிக் கொண்டிருந்தாள். கடைசியில் ரகுநாதன் ஜானகியிடம் "ராஜி சிவப்பாக நன்றாயிருக்கிறாள் இல்லையா? இவளை உன் தம்பிக்கு......" என்று கேலியாகக் கேட்டான்.

ஜானகிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "ஜானகி, உன் புல்லாக்கைக் கழற்றி ராஜிக்குப் போடேன், எப்படி இருக்கிறது பார்க்கலாம்!" என்றான் ரகுநாதன்.

ஜானகி ஜாக்கிரதையாகப் புல்லாக்கைக் கழற்றினாள். அப்பொழுது ரகு ஒரு யுக்தி செய்தான். "ஐயையோ! ஜானகி எழுந்திரேன்...... கீழே நண்டு ஓன்று போகிறது" என்று கத்தினான்.

ரகுநாதன் செய்த ஆர்ப்பாட்டத்தில் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்த ஜானகியின் கைகளிலிருந்து புல்லாக்குத் தவறி மணலில் எங்கேயோ விழுந்தது. அவர்கள் நண்டை விட்டு விட்டுப் புல்லாக்கைத் தேட ஆரம்பித்தார்கள்.

அரை மணி நேரத்துக்குமேல் தேடியும் புல்லாக்கு அகப்படவில்லை. அது எப்படி அகப்படும்? அதைத்தான் ரகுநாதன் சாமர்த்தியமாக எடுத்துச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு விட்டானே!

ஜானகியின் கண்களில் நீர் நிறைந்தது. ரகுநாதனும் தன் பொய்க் கோபத்தைக் காட்ட ஆரம்பித்தான், "அப்பொழுதே சொன்னேனா இல்லையா? பீச்சுக்கு வரும் போது புல்லாக்கு வேண்டாம், வேண்டாம் என்று அடித்துக் கொண்டேனே என் பேச்சைக் கேட்டாயா? இப்போ உங்கள் அப்பாவுக்கு நான் என்ன பதில் சொல்லுவது? அதிர்ஷ்ட புல்லாக்கு போச்சே!' என்றான்.

ஜானகி விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். கடைசியில் அவளையும் ராஜியையும் அழைத்துக் கொண்டு ரகுநாதன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். வந்தவுடன் மறுபடியும் ஜானகிக்கு ஒரு 'டோஸ்' கொடுத்து விட்டுத் தன் அறைக்குள் நுழைந்தான்.

மாமியார் புல்லாக்கைப் பற்றிக் கேட்டால் என்ன சொல்வது என்று நடுங்கிக் கொண்டே உள்ளே போன ஜானகியின் காதில். "ஜானகி! உடனே இங்கே வாயேன்!" என்று ரகுநாதன் கூப்பிட்டது காதில் விழுந்தது. அவள் முன் பக்கத்து அறைக்கு ஓடினாள்.

"ஜானகி! இதோ பாரேன், ஒரு விசித்திரம்! நண்டைக் கண்டு நடுங்கிக் கையில் இருந்த புல்லாக்கை எங்கேயோ போட்டு விட்டாயே, அது எங்கேயும் போகவில்லை. இதோ பார், அந்தப் புல்லாக்கு என் சட்டைப் பைக்குள்தான் விழுந்திருக்கிறது! இங்கே வந்து சட்டையைக் கழற்றும் போதுதான் தெரிகிறது!" என்று சொல்லிப் புல்லாக்கைக் கொடுத்தான்.

புல்லாக்கைத் தன் கையில் வாங்கிக் கொண்ட ஜானகியின் கண்களில் நீர் நிறைந்தது. 'என்னை மன்னித்து விடுங்கள் உங்கள் மனசுக்கு விரோதமாக நான் அதைப் போட்டுக் கொண்டிருந்ததனாலே தான் அது இன்று கெட்டுப் போகப் பார்த்தது. இனிமேல் நீங்கள் எப்பொழுது போட்டுக் கொள்ளச் சொல்கிறீர்களோ, அப்பொழுது போட்டுக் கொள்ளுகிறேன்" என்றாள் கள்ளங் கபடு தெரியாத ஜானகி.

அவளுடைய கபடமற்ற தன்மை ரகுநாதனுடைய மனத்தையும் உருக்கி விட்டது. "நீ புல்லாக்கைப் போட்டுக் கொள்ளக் கூடாது என்று நான் சொன்னேனா?" என்று சொல்லியபடியே அவள் மூக்கில் புல்லாக்கைப் போட்டான். இப்போதெல்லாம் புல்லாக்கு போடாமல் ஜானகி இருந்தால்தான் அவனுக்குப் பிடிப்பதில்லை.



# ஒவ்வொரு வேளை உணவுடனும் ஆரோக்யம் தரும் பானம்

குடும்பத்தின் ஒவ்வொரு நபரும் விரும்பக்கூடிய நறுமணம் உள்ளது "ஒவல்டின்". விவேகமறிந்த தாய்மார்கள், காலையிலும் இரவிலுமட்டுமின்றி ஒவ்வொரு வேளை உணவின் போதும் இந்த உணவு பானத்தைக் கொடுப்பதன் பயனை நன்குணர்வர்.

'ஒவல்டின்' மதிப்புவாய்ந்த அதிகப்படி உணவாக இருந்து விசேஷ வலுவும் ஜீவ சக்தியுமளிக்கும். சாதாரண உணவில் இது எப்பொழுதும் கிடைக்காது. குழந்தைகள் போஷாக்குடன் வளரவும், இரவில் நன்றாகத் தூங்கவும் உதவுகின்றது.

'ஒவல்டினில்' பழுத்த பார்லி மால்டின் புஷ்டியும், ஜீவ சக்தியும் அளிக்கும் குணங்களும், சுத்தமான ஏட்டுப்பாலும், விசேஷமாகத் தயாரித்த கோக்கோவும், மதிப்பு வாய்ந்த இயற்கை பாஸ்பைடேட்களும், விடமின்களும் நிறைந்த அளவில் அடங்கியுள்ளன.

இளையோர், நடுத்தர வயதினர், முதியோர் யாவருக்கும் வேண்டியது இது ஒன்றுதான்.

# 'OVALTINE'

## ஓ வ ல் டி ன்




உலகில் மிகப் பிரசித்தி பெற்ற உணவு பானம்

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.

OV. 303.

---


Edited, Printed and Published by R. Krishnamurthy at "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.

Regd. No. M. 4393